# Sri Venkateswara Temple, Tirumala

## Temple Timings



### SATURDAYS, SUNDAYS, MONDAYS and TUESDAYS

| | |
|---|---|
| 3-00 A M to 3-30 A M | Suprabhatam |
| 3-30 A M to 3-45 A M | Suddhi etc. |
| 3-45 A M. to 4-30 A.M | Thomala Seva (Arjitham Rs 100/- per person) |
| 4-30 A M to 4-45 A M | Koluvu and Panchanga Sravanam |
| 4-45 A M to 5-30 A M | I st Archana i e , Sahasranama Archana (Arjitham Rs. 100/- per person) |
| 5-30 A M. to 6-00 A M | I st Bell, Bali and Sattumora |
| 6-00 A M. to 11-00 A M | *Sarvadarsanam* |
| 11-00 A M. to 12-00 Noon | Suddhi, Second Archana (Ekantam) and Second Bell etc. |
| 12-00 Noon to 7-00 P M. | *Sarvadarsanam* |
| 7-00 P M to 8-00 P M | Suddhi, Night Kainkaryams (Ekantam) and Night Bell |
| 8-00 P M to 10-00 P M | *Sarvadarsanam* |
| 10-00 P M to 10-30 P M | Suddhi |
| 10-30 P M Depending on the closing of Sarvadarsanam | Ekanta Seva (Arjitham Rs 50/- per person) |

### II. On WEDNESDAYS

**(SPECIAL SEVA S.K ABHISHEKAM)**

| | |
|---|---|
| 3-00 A.M to 3-30 A M | Suprabhatam |
| 3-30 A M to 3-45 A M | Suddhi etc |
| 3-45 A M to 4-30 A M | Thomala Seva (Arjitham Rs. 100/- per person) |
| 4-30 A M to 4-45 A M | Koluvu and Panchanga Sravanam |
| 4-45 A M to 5-30 A M | I st Archana Sahasranama Archana (Arjitham Rs 100/- per person) |
| 5-30 A M. to 6-00 A M | I st Bell, Bali and Sattumora and preparations for S K Abhishekam etc |
| 6-00 A M. to 8-00 A M | Arjitha S K Abhishekam, Suddhi, II nd Archana (Ekantam) and bell etc |
| 8-00 A M to 7-00 P M | *Sarvadarsanam* |
| 7-00 P M to 8-00 P M | Suddhi, Night Kainkaryams (Ekantam) and Night Bell etc |
| 8-00 P M to 10-00 P M | *Sarvadarsanam* |
| 10-00 P M to 10-30 P M | Suddhi |
| 10-30 P.M Depending on the closing of Sarvadarsanam | Ekantha Seva (Arjitham Rs 50/- per person) |

### III. ON THURSDAYS

**(SPECIAL SEVAS : TIRUPPAVADA, POOLANGI SEVA)**

| | |
|---|---|
| 3-00 A M to 3-30 A M | Suprabhatam |
| 3-30 A M to 3-45 A M | Suddhi etc |
| 3-45 A M. to 4-30 A M | Thomala Seva (Arjitham Rs 100/- per person) |
| 4-30 A M to 4-45 A M | Koluvu and Panchanga Sravanam inside Bangaruvakili |
| 4-45 A M to 5-30 A M | I st Archana Sahasranama Archana (Arjitham Rs 100/- per person) |
| 5-30 A M to 6-00 A.M | I st Bell, Bali and Sattumora |
| 6-00 A M. to 8-00 A M | Salimpu, II nd Archana (Ekantam), Tiruppavada Alankaram, Bell etc |
| 8-00 A M to 6-00 P.M. | *Sarvadarsanam* |
| 6-00 P.M. to 8-00 P.M. | Pedda Suddhi, Night Kainkaryams, Poolangi Samarpana and Night Bell etc |
| 8-00 P.M to 10-00 P M | Poolangi *Sarvadarsanam* |
| 10-00 P.M. to 10-30 P M. | Suddhi |
| 10-30 P M Depending on the closing of Sarvadarsanam | Ekantha Seva (Arjitham Rs 50/- per person) |

### IV. ON FRIDAYS

**(SPECIAL SEVA · ABHISHEKAM)**

| | |
|---|---|
| 3-00 A.M. to 3-30 A M | Suprabhatam |
| 3-30 A M. to 5-00 A M | Sallimpu, Suddhi, Nityakatla Kainkaryams, Morning I Bell and preparations for Abhishekam etc |
| 4-30 A.M to 6-00 A.M | Abhishekam |
| 6-00 A M to 7-00 A M. | Samarpana etc |
| 7-00 A M to 8-00 A M | Thomala Seva and Archana (Arjitham Rs. 200/-) |
| 8-00 A M to 9-00 A M | II nd Bell, Bali and Sattumora etc |
| 9-00 A M to 8-30 P M | *Sarvadarsanam* |
| 8-30 P M. to 9-30 P M | Suddhi, Night Kainkaryams and Bell etc |
| 9-30 P M to 10-00 P.M | *Sarvadarsanam* |
| 10-00 P M to 10-30 P.M. | Suddhi |
| 10-30 P.M. Depending on the closing of Sarvadarsanam | Ekantha Seva (Arjitham Rs. 50/- per person) |

**Note** - 12-00 Noon to 7-00 P M' Circar and Arjitham Kalyanotsavam, Brahmotsavam, Unjalseva etc



பெற்ற தாய்தனை மகமறந்தாலும்
பிள்ளை யைப் பெறுந் தாய்மறந்தாலும்

உற்ற தேகத்தை உயிர்மறந் தாலும்
உயிரை மேவிய உடல்மறந் தாலும்

கற்ற நெஞ்சகம் கலைமறந் தாலும்
கண்கள நின்றிமைப் பதுமறந் தாலும்

நற்ற வத்தவர் உள்ளிருந் தோங்கும்
நமச்சி வாயத்தை நான்மற வேனே

— திருஅருட்பா

# ஸப்தகிரி

பிப்ரவரி - 1991

தனிப்பிரதி ரூ 1 | மலர் 21

வருடச் சந்தா ரூ. 12 | இதழ் 9


## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முனனட்டையில் : ஸ்ரீ காளஹஸ்தீஸ்வரர்

—சித்திரம் : ஏ. ராமச்சந்திரய்யா

பின்னட்டையில் : ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி திருக்கோயில்,

—திருப்பதி


சிறப்பாசிரியர்

திரு. எம். வி. எஸ். பிரஸாத், I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருபபதி.

ஆசிரியர்

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ

துணையாசிரியர்:

திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு :
EDITOR,
" Sapthagiri "
T. T. Devasthanams,
TIRUPATI

# உங்களுடன ....

நாள் தவறாது, காலந் தவறாது குறிப்பிட்ட நேரங்களுக்கு ஒருமுறை இரவும், பகலும் மாறி மாறி வருவதைக் கண்டு மனிதன் அதிசயித்தான். குறிப்பிடட மாதங்களில் மட்டுமே அதிக மழை பெய்யவும், அதிக வெய்யில் காயவும் பார்த்து வியந்தான். மாதம ஒரு முறை இரவில் வானம் இருட்டில் மூழ்குவதையும், வெளிச்சத்தில் மிதப்பதையும் கண்டு அஞ்சவும, மகிழவும் செய்தான், தன் அறிவிற்கு அப்பால் ஏதோ ஒன்று இந்த இயற்கையை ஆட்டிப் படைக் கின்றது என்று கண்டு தெளிந்தான். தன் சக்திக்கு மீறிய அந்த இயற்கையின் வலிமைக்கு ஒரு புனிதம் சேர்க்க விரும் பினான். அதுவே 'பக்தி' எனும் இறை வழிபாட்டிற்கு வழிவகுத்தது. அச்'சக்தி'யை தன் கண்ணால் காண விரும்பி னான். ஆகவே அவ்இயற்கையின் பிரதிநிதிகளாக விளங்கிடும்—உயிர்களின் ஆக்கத்திறகும், அழிவிற்கும் காரணமாக திகழ்ந்திடும்—காற்றையும், நெருப்பையும், நீரினையும், பூமியினையும் ஆகாயத்தையும் தன் மனதில் இருத்தி வழிபட விரும்பினான். கைகளால் தொட முடியாத அவற்றிற்குத் தன சிந்தனைக் கேற்ப, தன் மகிழ்ச்சிக் கேற்ப சின்னங்கள் ஏற்படுத்தினான். பல உருவமைதிகளை அமைத்தான். மகிழ்வு கொண்ட போதும், துன்பம் அடைந்த போதும் அவற்றிடமே முறையிட்டான. இதுதான் மனிதனுக்கும் இறைவனுக்கும உள்ள உறவின் வரலாறு

இயற்கையின பின்னணியில் திகழ்ந்திடும் அப்பெரும் சக்தியை அறிந்து தெளிந்திட்டபோது, அவனுக்கு ஒரு பிடிப்பாக 'உருவமைதிகள்' அமைந்திட்டன. இதுவே சகுண உபாஸனையாகும். இறைவனின் பெருமையை உணர்ந்து அவனை மனதில் இருத்தி, புகழ்பாடும் மந்திரங்கள் சொல்லி, பூசைகள் செய்து தன் உறவைப் பலப்படுத்த 'இவ்வுருவ வழிபாடு பெரிதும்' துணை நினறது. மேலும் அது இறைவனுக்கும் மனிதனுக்கும் ஒரு பாலமாக விளங்கியது. இவ்வழி பாட்டினால் தன் மனம் செம்மையடையவும், கோபம், பொறாமை, ஆசை, காமம எனும் பிரச்சனைகளுக்குள்ளாக்கிடும் உணர்வுகளை அடக்கவும், அதாவது ரஜோதமோ குணங்கள் அழியவும், சத்துவ குணங்கள் மேலோங்கவும் வழிகண் டான். சகுண உபாஸனை மூலம் நிர்க்குண உபாஸனை கைகூட முயற்சித்தான். இவ்வகையில் தனக்குப் பிடித்த, தன் அறிவு நிலைக்கேற்ப, அனுபவ தேர்ச்சிக்கு ஒப்ப பல உருவமைதிகளில் அப்பரம்பொருளைக் கண்டு ஆனந்தித்தான். இதுவே இஷ்ட தெய்வ, குல தெய்வ, இன தெய்வ வழிபாட்டிற்கு இடம் கொடுக்க, பல சமயங்கள் தோன்றின. இச் சமயங்களுள் முதிர்ந்த ஒன்றாக மலைமகள் நாயகனின் பெருமை பேசும் சைவ சமயம் விளங்குகிறது.

தான் வழிபடும் சிவனார்க்குப் பல உருவமைதிகள் அமைத்திட்டபோது, தத்துவப் பின்னணியில் உருவ, அருவ, அருவுருவ நிலைகளில் தம் தலைவனைக் கண்டு ஆனந்தித்து ஆராதனை செய்திட்டார்கள். "காணாத அறி வினுக்கும் உருவினுக்கும் காரணமாய், நீநாக மணிந்தார்க்கு நிகழ்குறியாம சிவலிங்கம்" என்றும், "அனுக்ரஹாய லோகானாம் லிங்கானி ச மகேஸ்வர" என்றும் பலவாறு கூறப்படும் சான்றோர் உரைகளுக்கேற்ப அருவுருவ நிலையில் சிவனின் சின்னமாக லிங்கத்தை வழிபட்டனர் சைவப் பெருந்தகையாளர்கள். தங்களுடைய ஆன்ம விழிப்புணர்வுக்கு லிங்க வழிபாடு பெரிதும் துணை நிற்கக் கண்டு, உபநிஷத்துக்களில் கூறப்படும் 'பரபிரம்ம'த்தினை இவ்வழிபாட்டில் அறிந்து தெளிந்தனர். ஹரப்பா, மொஹஞ்சதரோ அகழ்வாராய்ச்சிகளினமூலம் இவ்லிங்க வழிபாடு காலத்தால் மூத்தது என்பதும், மேலும் இவ்வழிபாடு கடல் கடந்தும் சென்றுளளது என்பதும் சரித்திர சமய ஆராய்ச்சியாளர்களின் துணிபாகும்.

மகாதேவனின் ரூபா அருபமான சிவலிங்கமே நாட்டின் எல்லா சிவாலயங்களின மூலத்தானத்தில் பெரிதும் இடம் பெற்றிருப்பது, உலகின் எல்லா உயிர்களின் தோற்றமும், லயமும் அடங்கலுமாக சிவனார் இருப்பதாகக் கூறும் சைவ சமய நெறிக்குச் சானறாக அமைந்துளளது. 'ஒருவன் என்னும் ஒருவனைக் காண்க' எனும் மணிவாசகர் புகழ்ந் தேத்தும் "நவ வ்யூஹ ஸ்வரூபி'யான அத்தூயப் பேரின்பச் செம்பொருளானவன், இவ்வுலக உயிர்கள் தோன்றுதறகுக் காரணமான ஐம்பெரும் பூதங்களுக்கும் தலைவனாவான் எனும பேருண்மைக்குச் சான்றாக "பஞ்சலிங்க"மூர்த்தியாக கோயில் கொண்டு விளங்குகின்றான். தன்னுடைய அறுபத்தி நான்கு திருவுருவங்களை இப்புண்ணிய பூமியில் முக்கிய மாக 274 திருத்தலங்களில் திகழச் செய்து, நாட்டின் சைவ சமய ஒற்றுமையைக் காத்திடும் வகையில் கேதாரம் முதல் இராமேஸ்வரம் வரை பன்னிரண்டு ஜ்யோதிர் லிங்கங்களாகச் சுடர்விட்டு "ருதம் த்ராவய தி" எனும் உபநிஷத் வாக்கிற் கொப்ப ஆபத்பாந்தவனாகிய முக்கண்ணன் "அஞ்சுக்கல்லால் ஒரு கோட்டை, அந்த ஆகாசக் கோட்டைக்கு ஒன்பது வாசல்" எனும்படியாக, பஞ்ச பூதங்களின சேர்க்கையான இம்மனிதன் மாண்புற பஞ்ச லிங்கங்களாக வழிபடப் பெறும் பெருமை கொண்டு விளங்குகிறான். 'தென்னாடு போற்றும்', அப் 'பஞ்சாக்ஷர' நாயகனை, ஒலியும ஒளியும் கடந்து ஓங்காரமாக நின்றிடும் அச்சோதி வடிவானவனை நாமும் சமய பாகுபாடின்றி, இன வேற்றுமை மறந்து, இச்சிவராத்திரி திருநாளன்று தொழுதிடுவோம், சமய ஒற்றுமையைக் காத்திடுவோம.

# செய்திச் சுருக்கம்

புத்தாண்டு முதல் நாளான 1-1-91 அன்று திருமலைக்கு 87,000 யாத்திரிகர்கள் வருகை புரிந்தனர். இது கடந்த ஆண்டைவிட 5000 யாத்திரிகர்கள் அதிகமாவர். சுமார் 56,000 யாத்திரிகர்கள் தர்ம தரிசனம் பெற்றனர். உண்டி, லட்டு விற்பனை மூலமாக முதல் நாளன்று கோயில் வருமானம் ரூ. 30.73 இலட்சமாகும். இதுகடந்த ஆண்டைவிட ரூ. 73,000 அதிகமாகும்.

ஃ ஃ ஃ

ஆந்திர மாநில சுகாதார அமைச்சர் திருமதி. ஜி. குதூகலம்மா அவர்கள் 4-1-91 அன்று திருமலைக்கு வருகை புரிந்தார்.

ஃ ஃ ஃ

திருப்பதி ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயிலின் வருடாந்திர தெப்போத்ஸவம் 26-1-91 முதல் 30-1-91 வரை 5 நாட்களுக்கு வெகுச் சிறப்பாக நடைபெற்றது. உத்ஸவர் பல்வேறு அலங்காரங்களில் தெப்பத்தில் வீற்றிருந்து பக்தர்களுக்கு அருள் பாலித்தார்.

ஃ ஃ ஃ

அண்மையில் அமைக்கப்பட்ட தி.தி. தே. 'ஆழ்வார்கள் திவ்ய பிரபந்தத் திட்டம்'எனும்அமைப்பிற்குதி.தி.தே செயலாட்சித் தலைவர் திரு. எம். வி. எஸ். பிரஸாத் அவர்கள் தலைவராகவும், மக்கள் தொடர்பு அலுவலர் திரு. ஆர். சூர்ய நாராயணமூர்த்தி அவர்கள் அவைக்கூட்டுநராகவும், டாக்டர். எம். வரதராசன் அவர்கள் சிறப்பு அலுவலராகவும் (திருவேங்கடவன் பல்கலைக் கழகத் துணை வேந்தர் அவர்களின் தனி உதவியாளர் பதவியிலிருந்து தற்போது இப்பதவிக்குத் தற்காலிக மாற்றஞ் செய்யப்பட்டுள்ளார்) நியமிக்கப்பட்டுள்ளனர்.

ஃ ஃ ஃ

இலவச விக்ரஹங்கள் :

தங்கள் ஊர்களிலுள்ள கோயில்களுக்காக கடவுளர்களின் திருவுருவக் கற்சிலைகள் வேண்டுவோர், சம்பந்தப்பட்ட அறநிலைய துறையைச்சார்ந்த குறைந்த பட்சம் உதவி ஆணையர் தகுதிக்குக் குறையாமல் இருக்கும் அலுவலர்களிடமிருந்து பரிந்துரை செய்யப்பட்டு விண்ணப்பம் அனுப்பப்படுவோர்க்கு இலவசமாக ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மற்றும் ஸ்ரீ பத்மாவதி தாயார் ஆகியோரின் திருவுருவக் கற்சிலைகள் வழங்கப்படும். மற்றைய கடவுளர்களின் திருவுருவக் கற்சிலைகளும், பஞ்சலோக சிலைகளும் 50 சதவிகித மலிவுத் தொகையில் வழங்கப்படும். சம்பந்தப்பட்ட கோயில்களின் கட்டிட வரைப்படத்தினையும் பரிசீலனைக்காக அனுப்புதல் வேண்டும். மற்றைய கடவுளர்களின் திருவுருவச் சிலைகள் வேண்டுவோர், அதற்கான பாதித் தொகையினை அனுப்பிய பிறகே, சிலைகளை உருவாக்கப்படும் பணி மேற்கொள்ளப்படும். சமைத்த சிலைகளை சம்பந்தப்பட்டோர் தங்கள் சொந்த பொறுப்பிலும், செலவிலும் அவற்றைத் திருப்பதியிலிருந்து தங்கள் ஊருக்கு எடுத்துச் செல்லுதல் வேண்டும். இந்த விஷயத்தில் தி. தி. தேவஸ்தானம் எந்தவிதமான பொறுப்பையும் ஏற்காது.

ஃ ஃ ஃ

திருமலையில் 16-1-91 அன்று, கோயிலிலிருந்து மூன்று கிலோ மீட்டர் தொலைவிலுள்ள 'பாருவேட்டை மண்டபத்தில்' ஸ்ரீ வேங்கடேஸ்வர பெருமானின் பாரிவேட்டை உத்ஸவம் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. இதுபோது வேங்கடேசப் பெருமாள் மற்றும் கிருஷ்ணனின் உத்ஸவமூர்த்திகளின் திருவீதி உலா இனிது மேற்கொள்ளப்பட்டது. இவ்விழாவில் தி. தி. தே. உயர் அலுவலர்கள் பலரும் பங்கேற்றனர்.

ஃ ஃ ஃ

காஞ்சி ஸ்ரீ வரதராஜ பெருமாள் கோயிலின் புதிய விமானத்தின் மகா சம்ப்ரோக்ஷணத்தை முன்னிட்டு, அக்கோயிலுக்கு தி. தி. தேவஸ்தானத்தின் சார்பில் 'பட்டு வஸ்த்ரம்' ஒன்று 27-1-91 அன்று வழங்கப்பட்டது.

ஃ ஃ ஃ

வானொலி நிலையம் :

திருப்பதியில் புதிய பண்பலை வானொலி நிலையம் ஒன்று மத்திய உள்துறை அமைச்சர் திரு. சுபோத் கான் ஸஹாய் தலைமையில், ஆந்திர மாநில முதலமைச்சர் திரு. என். ஜனார்தன ரெட்டி அவர்களால் அண்மையில் திறந்து வைக்கப்பட்டது. இத்திறப்பு விழாவின்போது தி. தி. தே. செயலாட்சித் தலைவர், உள்ளூர் பாராளுமன்ற உறுப்பினர், தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் மற்றும் பல உயர் அலுவலர்களும் பங்கேற்றனர்.

ஃ ஃ ஃ

21-1-91 அன்று திருமலையில் கூடிய தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுக் கூட்டத்தில் கீழ்வரும் முடிவுகள் மேற்கொள்ளப்பட்டன.

திருப்பதியிலுள்ள தேவஸ்தானத்தாரின் முதல் சத்திரத்தினை இடித்துவிட்டு அங்கு ரூ. 10 கோடி செலவில் பல அடுக்கு தளங்களைக் கொண்ட கட்டிடம் ஒன்று கட்டப்பட உள்ளது. இக்கட்டிடத்தின் கீழ்த்தளத்தில் திருமலைக்குச் செல்வதற்கான பேருந்து நிலையம் ஒன்று உருவாக்கப்படும்.

திருமலையில் காஞ்சி காமகோடி பீடம் வெளியிடும் சமய நூல்களை விற்பனை செய்யும் வகையில், மேற்படி மடத்தாருக்கு இலவசமாக இடம் ஒன்று ஒதுக்கப்படும்.

திருப்பதியிலுள்ள கங்கையம்மன் கோயில் மேம்பாட்டிற்காக தி. தி. தேவஸ்தானத்தின் சார்பில் ரூ. 1 இலட்சம் வழங்க மேலாண்மை முடிவு செய்துள்ளது.

திருப்பதியிலிருந்து 2 கி. மீ. தொலைவில் திருச்சானூர் சாலையில் 'ஸ்ரீ பத்மாவதி கல்யாண மண்டபத் தொகுதி' ஒன்று ரூ. 1,80 கோடி செலவில் 8 ஏக்கர் நிலப்பரப்பில் கட்டப்பட உள்ளது.

திருப்பதியிலுள்ள ஆந்திர மாநில அரசின் பேருந்து நிலைய மேம்பாட்டிற்காக தேவஸ்தானம் ரூ. 1 கோடி வழங்க உள்ளது.

திருப்பதியில் அலிபிரி (திருமலை மலையடி வாரம்) அருகில் உள்ள

(48-ம பக்கம் பார்க்க)

# விரதங்களின் பெயர்கள்

ஒரு சமயம் இந்திரன் மாறு வேஷம் பூண்டு பூமியில் சஞ்சாரம் செய்த பொழுது தற்செயலாக ஒரு பிராம்மணனைக் கண்டார். அப் பிராம்மணர், இந்திரனை நோக்கி, 'தாங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்' எனக் கேட்டார். தான் ஸ்வர்க்கத்திலிருந்து வருவதாக இந்திரன் கூறினான். உடன் பிராம்மணன் 'அங்கு ரம்பை க்ஷேமமாக இருக்கிறாளா? நான் அவளை விசாரித்ததாகக் கூறும் என்றார். 'அவள் சௌக்யந்தான். உமக்கு அவளை எப்படித் தெரியும்' என்று இந்திரன் வினவ, 'நான் ரம்பையின் அழகைப்பற்றி கேள்விப் பட்டு இருக்கிறேன். அவளையே மணந்துகொள்ள விரும்புகிறேன்' என்றார் பிராம்மணர். 'வித்தை, அரிய கலை, வீர்யம், கீர்த்தி, விரதம் ஆகிய இவைகளில் ஏதேனும் ஒன்றாவது இருந்தாலல்லவா அவளை அடையமுடியும்? உமக்கு இதில் என்ன யோக்யதை இருக்கிறது'. என்றார் இந்திரன்.

'நான் ஒரு விரதம் செய்கிறேன். அதற்கு சகட விரதம் என்று பெயர். அதாவது சகடம் என்னும் வண்டியை யான் உண்பதில்லை' என்று பிராம்மணர் கூறினார்.

இதைக் கேட்டு நகைத்த இந்திரன் 'ஐயா இதென்ன விரதம்? சகடத்தை யார் தான் உண்ணுகின்றனர்? அதை உண்ணாதது ஒரு விரதமா?' என்றார்.

'ஆம். ஏதேனும் ஒன்றை உண்ணாமல் விடுவது விரதந்தானே. உயிர் போனாலும் நான் சகடத்தை உண்ணமாட்டேன்' என்றார் பிராம்மணர்.

இதைக் கேட்ட இந்திரன் பிராம்மணரை பரிசோதனை செய்ய எண்ணினார்.

பல நாள் பிராம்மணருக்கு உணவு கிடைக்காதபடி செய்தார். பிராம்மணர் பசியால் வாடி துடித்து விழுந்த பொழுது இந்திரன் பிராம்மணர் அருகே வந்து மாவினாலும் சர்க்கரையாலும் (ஜீனியாலும்) வண்டி போல் செய்த பொம்மையை கொண்டு வந்து பிராம்மணரிடம் கொடுத்து 'ஐயா உண்ணுங்கள் இல்லையேல் இறந்து விடுவீர்' என்றார். உயிர் போனாலும் சகடத்தை உண்ண மாட்டேன்' என்று வைராக்கியமாய் இருந்தார் பிராம்மணர்.

பிராம்மணரின் வைராக்யத்தைக் கண்ட இந்திரன், உடன் ரம்பையுடன் பிரத்யக்ஷமாகி அவரை ஸ்வர்க்கத்திற்கு அழைத்து சென்றார். சகட விரதத்தால் ரம்பையை மணந்து கொண்டார்.

ஒரு யக்ஞ யாகமின்றி கேவல விரதத்தைச் செய்தவனுக்கே ஸ்வர்க்க வாசம் என்றால் நியமத்துடன் விரதத்தைக் கடைட்பிடிப்பவர்களுக்கு எதுதான் கிட்டாது? என இக்கதை விளக்குகிறது.

இது முதல் 197 விரதங்களின் பெயர்கள் கூறப்பட்டுள்ளன. இவைகளில் சில விரதங்கள் தென்தேசத்திலும் அனுஷ்டிக்கப்படுகின்றன.

1. அசோக விரதம்
2. அசூன்ய சயன ,,
3. அவியோக ,,
4. அநந்த திருதீயா ,,
5. அக்ஷய்ய ,,
6. அங்காரக சதுர்த்தி ,,
7. அசலா ,,
8. அநகாஷ்டமி ,,
9. அரண்ய ,,
10. அகண்ட விரதம்
11. அபாதக ,,
12. அநங்க ,,
13. அநந்த ,,
14. அனந்தவிரத ,,
15. அபிநவ சந்த்ரார்க்ய ,,
16. அபராஸாம்பராணீய ,,
17. அபராதம் ,,
18. அஜதாந ,,
19. அன்னதான மஹிமை ,,
20. ஆர்த்ராநக்தகரீ ,,
21. ஆதித்ய மண்டலவிதி ,,
22. ஆசாதசமி ,,
23. ஆக்நேயி சதுர்தசி ,,
24. அகஸ்த்யார்க்ய ,,
25. ஆந்தோளிக விதி ,,
26. ஆபாகதாந விரதம்
27. ஆத்மபிரதிகிருதி ,,
28. ஆஜ்யாசல ,,

திரு. P. முரளீதரன், M.COM., M.Ed.,
திருச்சி.

29. திலக ,,
30. கரவீர ,,
31. கோகிலா ,,
32. பிருஹத்யோ ,,
33. பத்ரோபவாஸ ,,
34. யமத்விதியா ,,
35. மதூக திருதீயா ,,
36. மேகபாலீ ,,
37. ரம்பா ,,
38. கோஷ்பத ,,
39. ஹரிதாலீ ,,
40. லலிதா திருதீயா ,,
41. உமாமஹேச்வர ,,
42. ரம்பாவிரத ,,
43. ஸௌபாக்யாஷ்டதிருதீயா ,,
44. ரஸகல்யாணிநீ ,,
45. சைத்ர பாத்ரபதமா கத்ரிதி ,,
46. விநாயகஸ்நபந ,,
47. விநாயக சதுர்த்தி ,,
48. சாந்திவிரதபஞ்சமி ,,

49. ஸாரஸவத விரதம்
50. நாகபஞ்சமீ ,,
51. ஸ்ரீ பஞ்சமீ ,,
52. விசோக ஷஷ்டீ ,,
53. கமல ஷஷ்டீ ,,
54. மந்தார ஷஷ்டீ ,,
55. லலிதா ஷஷ்டீ ,,
56. கார்த்திகேய ஷஷ்டீ ,,
57. விஜய ஸப்தமீ ,,
58. திரயோதச வர்ஜ்யஸப்தமீ ,,
59. குக்குட மர்க்கடீ ,,
60. உபய ஸப்தமீ ,,
61. கல்யாண ,,
62. சர்க்கரா ,,
63. கமலா ,,
64. சுப ஸப்தமீ ,,
65. ஸ்நபந ,,
66. புத அஷ்டமி ,,
67. ஜன்மாஷ்டமீ ,,
68. தூர்வாஷ்டமீ ,,
69. கிருஷ்ணாஷ்டமீ ,,
70. ஸோமாஷ்டமீ ,,
71. பில்வ நவமீ ,,
72. த்வஜ ,,
73. உல்கா ,,
74. தசாவதார தசமீ ,,
75. தாரக த்வாதசீ ,,
76. ரோஹிணீ சந்த்ர ,,
77. ஹரிஹரஹிரண்ய கர்ப்ப பிரபாகர அவியோக ,,
78. கோவத்ஸ துவாதசீ ,,
79. சயந உததாபந ,,
80. நீராஜன (ந) ,,
81. பீஷ்ம பஞ்சக ,,
82. மல்லத்வாசசீ ,,
83. பீமத்வாதசீ ,,
84. சிரவணத்வாதசீ ,,
85. விஜய சிரவண ,,
86. ஸம்பிராப்தி ,,
87. கோவிந்த ,,
88. மநோரத ,,
89. சஷ்டி ,,
90. ஸுகிருத ,,
91. தரணீவ்ரத ,,
92. விசோக துவாதசீ ,,
93. விபூதி துவாதசி ,,
94. மதன(ந) துவாதசீ ,,
95. மந்தார நிம்பார்க்ககரவீர ,,
96. யமதர்சந திரயோகதசீ ,,
97. பாலி விரத ,,
98. ரம்பா ,,
99. சிரவணிகா ,,
100. நக்தோபவாஸ விதாக ,,
101. சிவசதுர்தசீ ,,
102. பல தியாக ,,
103. விஜய பௌர்ணமாஸீ ,,
104. வைசாகீ கார்திகீமாகீ ,,
105. யுகாதி திதி ,,
106. வடஸாவித்ரி ,,
107. கிருத்திகா விரத ,,
108. பூர்ணமநோரத ,,
109. விசோக பூர்ணிமா ,,
110. ஸாம்பராயணீ ,,
111. நக்ஷத்திர புருஷ ,,
112. சிவநக்ஷத்திர புருஷ ,,
113. ஸம்பூர்ண ,,
114. காமதமநவேச்யா ,,
115. விருந்தாக ,,
116. கிருஹ நக்ஷத்ர ,,
117. சனைச்சர ,,
118. நவக்ரஹ ,,
119. ஸங்க்ராந்தி உத்யாபந ,,
120. விஷ்டிவிருத ,,
121. சுக்ரகுரு அர்க்ய ,,
122. விருத பஞ்சாசீதி ,,
123. மாகஸ்நாந ,,
124. நித்யஸ்நாதவிதி ,,
125. ருத்ரஸ்நாந ,,
126. கிரஹணஸ்நாந ,,
127. வாபீகூப தடாகவிதி ,,
128. விருஷோத்யாபந ,,
129. தேவபூஜாபல ,,
130. தீபதாநவிதி ,,
131. விருஷோத் ஸர்க்ர ,,
132. பால்குண பௌர்ணமீ ,,
133. தமநக ஆந்தோலக ரதயாத்ரா விதி ,,
134. மதநமஹோத்ஸவ ,,
135. பூதமாத்ரு ,,
136. சிராவண பூர்ணிமா ரக்ஷாபந்தனவிதி ,,
137. மஹா நவமீ ,,
138. மஹேந்த்ரத்வஜ ,,
139. தீபாளிகோத்ஸவ ,,
140. நவக்ரஹலக்ஷவிதி ,,

141. கோடிஹோமவிதி விரதம்
142 மஹாசாந்தி விதி ,,
143. கணநாத சாந்தி ,,
144. நக்ஷத்ரஹோம ,,
154' காஞ்சநபுரீ ,,
146. கந்யாப்ரதாநமஹிமை ,,
147. பிராம்மண சுச்ரூஷா ,,
148. விருஷதானவிதி ,,
149. பிரத்யக்ஷகோதான ,,
150. திலதேநு ,,
151. ஜலதேநு ,,
152. கிருத தேநு ,,
153. லவண தேநு ,,
154. ஸ்வர்ண தேநு ,,
155. ரத்ந தேநு ,,
156. உபயமுகி கோதாந ,,
157. கோ ஸகஸ்ரதாந ,,
(பசுமாடு)
158. கபிலா தான ,,
159. மஹிஷீ தான ,,
160. பூதாந ,,
161. ஸுவர்ண பிருதிவீ ,,
162. ஹலபங்க்தி தாந ,,
163. கிருஹதாந விதி ,,
164. ஸ்தாலி தாந ,,
165. தாஸீ தாந ,,
166. பிரபா(தண்ணீர்ப்பந்தல்) ,,
167. வித்யாதாந ,,
168. துலாபுருஷ தாந ,,
169. ஹிரண்யகர்ப்ப ,,
170. பிரும்மாண்ட ,,
171. கல்ப ருக்ஷ ,,
172. கல்பலதா ,,
173. கஜரத அச்வரத ,,
174. காலபுருஷ ,,
175. ஸப்தஸாகர ,,
176. மஹாபூதகட ,,
177. சய்யாதான ,,
178. ஹிரண்யாசரவத ,,
179. ஹிரண்யாச்வ ,,
180. கிருஷ்ணாஜிந ,,
181. ஹேம ஹஸ்திரத ,,
182. விசவ சகர ,,
183. புவநமஹிமாபிரதிஷ்டா ,,
184. நக்ஷத்ர தாந ,,
185. திதி தாந ,,
186. வராஹதாந ,,
187. தான்ய பர்வததாந ,,
188. லவண பர்வததாந ,,
189. குட (வெல்லம்) ,,
190. ஹேமாசல ,,
191. திலாசல ,,
192. கார்பாஸாசல (பஞ்சு) ,,
193. ரத்நாசல ,,
194. ரௌப்யாசல ,,
195. சர்க்ராசல ,,
196. ஸதாசார தர்ம ,,
197 ரோஹிணீ சந்த்ரசயந ,,

ஆக 197 விரதங்கள்.

## விரதங்களில் கவனிக்க வேண்டிய விஷயம்

ஆண், பெண் இருவர்களும் சேர்ந்தே விரதங்களை செய்ய வேண்டும். பதியின் (கணவனின்) உத்திரவு பெற்று ஸுமங்கலிகளும் செய்யலாம். சில விரதங்கள் அவசியமாய் செய்யவேண்டும்.

ஏகாதசி, பிரதோஷம், சிவராத்ரீ, ரிஷிபஞ்சம் இவைகளைச் செய்தே ஆகவேண்டும். ஒவ்வொரு விரதத்திற்கும் உத்யாபநம் உண்டு. உத்யாபநம் செய்யாமல் இறந்து விட்டால் நரகமும் மறுபிறவியில் நோயும் உண்டாகும். இறந்தவருடைய புத்ரன் (பையன்) அல்லது புத்ரி (பெண்) உத்யாபநம் செய்து விரதத்தை முடிக்க வேணடும்.

தனமுள்ளவர்கள் (பணக்காரர்கள்) லோபி குணத்தால் (கஞ்சத்தனம்) விரததகை குறைத்துச் செய்யக்கூடாது. ஏழைகள் தனது சக்திக்கு மீறி செலவு செய்து விரதம் செய்யக்கூடாது. அவர்களது சக்திக்குத் தகுந்தவாறு விரதம் செய்தல் வேண்டும்.

விரத தினத்தில் காலையில் குளித்து சந்த்யாவந்தனம் செய்து விட்டுப் பின் விரதம் எந்தவிதமான விக்நமும் இல்லாமல் நல்ல விதமாக முடிக்க வேண்டும் என்று பகவானை பிரார்த்தித்து பின் விரதத்தை தொடங்க வேண்டும்

விரதத்திற்கு உண்டான விக்ரஹத்தை (தெய்வ வடிவம்) அவர் அவர்களது சக்திக்கு ஏற்றால்போல் ஸ்வர்ணத்திலோ, வெள்ளியிலோ, தாமிரத்திலோ செய்து விரதத்தை முடித்து தன் குருவுக்கு முதல் தானம் அளிக்க வேண்டும்

விரத அனுஷ்டான தினத்தில் உபவாஸம் இருந்து, இரவு கண் விழித்து அந்தந்த விரத மஹாத்மியத்தை கேட்க வேண்டும். மறுநாள் அறவோர்க்கு அன்னமளித்து தக்ஷிணை தாம்பூலம் கொடுத்த பின்பே விரதம் இருப்பவர்கள் சாப்பிட வேண்டும்.

விரத தினத்தன்று வெளியே போகக்கூடாது. காமம், கோபம், ஒருவரை நிந்திப்பது, பொய் கூறுவது, தாம்பூலம் தரிப்பது, சிருங்காரத்தை நினைப்பது, எண்ணெய் தேய்த்துக் கொள்வது, வபநம் (மயிர் கழிப்பது) செய்து கொள்வது, பற்குச்சியால பல் விளக்குவது, வம்பு பேசுவது, உரக்க அழுவது, சிரிப்பது முதலிய செய்கைகளை விலக்க வேணடும.



# தொண்டு செய்வீர்!

திரு. கே. ஆர். கிருஷ்ணமாச்சாரி,
ஈரோடு.

"ஸெகெங்கர்யம ஸொரூப் ஜீவாத் மாகளைலுவோ" 'ஜீவாத்மாவானது தொண்டின் இயற்கையான வடிவமாகும். அதாவது பிறர்க்குத்தொண்டு செய்வதற்குத்தான் இந்த ஜீவாத்மா பிறப்பெடுக்கின்றது. இதை உணர்வீர்' என்று ஸௌராஷ்ட்ர மொழிப் பாடல் ஒன்றில் கூறுகின்றார் ஸ்ரீமத் நடன கோபால நாயகி ஸ்வாமிகள். இதை உணர்ந்து (களைலி) தொண்டு செய்வீர் (கைங்கர்யம் கரோ) என்று அப்பாடலில் நம்மை வேண்டுகிறார்.

தொண்டு யாருக்குச் செயய வேண்டும்? மானவ ஸேவை மாதவ ஸேவை, மக்கள் தொண்டே மகேசன் தொண்டு என்று நீங்கள் கேட்டதில்லையா? நீங்கள் செல்வந்தராக இருந்தால் செல்வத்தின் தர்மகர்த்தாவாக விளங்கி செல்வத்தின் ஒரு பகுதியைமக்களின் நலனுக்காகச்செல விடுங்கள். பெற்றோர் மனம் மகிழ்வுடன் விளங்குமாறு அவர்கட்கு தொண்டு செய்யுங்கள்.

குருவின் உபதேசம் மூலம்தான் இறைவனை நாம் அடைய முடியும். எனவே குருவிறகுத் தொண்டு செய்யுங்கள். பிறப்பு இறப்பு எனும் தீராத வியாதி நீங்குவதற்கு என்ன வழி? இறையடியார்களுடன் இணைந்து எப்பொழுதும் இறைத் தொண்டு புரிந்தீர்களானால் அந்த வியாதி நீங்கும். முக்தி பெறலாம். இறைவனாம் கண்ணனுக்கு பூஜையின்மூலம் தொண்டு செய்யுங்கள். அதாவது மக்கள், பெற்றோர், குரு, இறைவன் ஆகிய அனைவருக்கும் தொண்டு செய்யுங்கள் என்று நாயகி சுவாமிகள் அப்பாடலில் வேண்டுகின்றார்.

நாம் உழைக்கின்றோம், சம்பாதிக்கின்றோம் சாப்பிடுகிறோம். பிறருக்கு ஏன் தொண்டு செய்ய வேண்டும். அதனால் நமக்குக் கிடைக்கும் பலன் என்ன? என்று அன்பர் ஒருவரது மனதில் கேள்வி பிறக்கின்றது. இந்த மனித ஜன்மா வெறும் உழைத்து உண்டு மடிவதற்காக ஏற்பட்டதல்ல. இப்பிறவியிலேயே முக்தியினைப் பெற வேண்டாமா? பிறப்பு, இறப்பு எனும் சுழற்சி வினைப் பயனால் அல்லவோ ஏற்படுகின்றது. அந்த சுழற்சித் தளையிலிருந்து அறுபட 'தொண்டு' எனும் அறுவாளால் தான் முடியும். அதனை உணர்ந்து தான் ஆழ்வார்கள், ஆசார்யர்கள் மக்கள் தொண்டு, மாதவன் தொண்டு புரிந்தார்கள், அந்த மஹாத்மாக்கள் பிறந்த புண்ணிய பூமியில் பிறந்த நீங்களும் தொண்டு செய்ய வேண்டாமா? அவசியம் தொண்டு செய்வீர் என்று வேண்டுகிறார் நாயகி சுவாமிகள்.

'தொண்டாவது, கிண்டாவது(கைங்கர்யம், கிங்கர்யம்) அதெல்லாம் எதற்கு; வேலையை பார்த்துட்டு போங்கள்' என்று கூற வேண்டாம். அவ்வாறு கூறுபவர்களின் கதி என்ன தெரியுமா? வினைக்காட்டில் மாட்டிக் கொணடு துன்பம் அனுபவித்துக் கொண்டேயிருப்பார்கள். சாதாரணமாக காடு என்றாலே பயத்தினைத் தரக்கூடிய தொன்றாகும். அதனை உவமையாகக்கூறி விளைக்காடு என்ற புதிய சொல்லையே சுவாமிகள் கையாண்டுள்ளார். துன்பம் அனுபவிப்பார்கள் என்று கூறாமல் அனுபவித்துக் கொண்டேயிருப்பார்கள் என்று கூறியிருப்பதிலிருந்து அத்தகையோர் அனுபவிக்கப் போகும் துன்பத்திற்கு கால எல்லையே இல்லை என்று பொருளாகின்றது. எனவே வினைப்பயன் நீங்கி மீண்டும் பிறவா நிலை அடைய தொண்டு செய்யுங்கள் என்கிறார். மேலும் தொண்டு செய்ய மறுப்பவர் வரும் பிறப்பில் புழுக் கூட்டத்தில் பிறப்பர் என்றும் இப்பாடலில் எச்சரிக்கின்றார் நடன கோபாலர்.

தொண்டினை எவ்விதம் செய்வது? "காஸால் மொ:ந்நால் ஸரீரா:ல், கர்வாய்"- அதாவது செல்வம், மனம், உடல் ஆகிய மூன்றின் மூலம் தொண்டு செய்யலாம். ஒருவரிடம் நிறைய பொருட்செல்வம் இருக்கின்றது. அறக்கட்டளை நிறுவி மக்களுக்கு உதவி செய்யலாம். அன்ன தானம் ஒரு உதாரணமாகும். திருக்கோயில் திருப்பணி புரியலாம். ஒருவரிடம் செல்வம் இல்லை; உடல் உழைப்பினை நல்கி தொண்டு செய்யலாம். செல்வமும் இல்லை; உடல் உழைப்பினை நல்க நேரமும் இல்லை என்று கூறுகின்றீர்களா? ஏன் மனம் என்று ஒன்று உங்களிடம் இருக்கின்றதே! அதன் மூலம் தொண்டு செய்யுங்கள் எனகிறார் சுவாமிகள்.

செல்வம், உடல் உழைப்பு மூலம் தொண்டு செய்தல் என்பது புரிகின்றது. மனத்தினால் தொண்டு செய்வது புரியவில்லையே? என்பது அன்பர் ஒருவரது கேள்வி. பொது நலனுக்காக, தொண்டிற்காக செல்வர் செல்வம் நல்கவும், பலமுடையோர் உடல் உழைப்பு நல்கவும் நாம் தூண்டு கோலாக இருப்பது மனத்தினமூலம் செய்யும் தொண்டாகின்றது. ஆன்மீகத் தொணடு புரியும் பத்திரிக்கைகளைமற்றவரும் வாங்கிப் படிக்குமாறு செய்வது இத்தகு தொண்டிற்கு ஒரு உதாரணமாகும்.

ஸ்ரீநாயகி சுவாமிகள் காட்டிய வழியில் தொண்டு புரிந்து இகபர நலன் பெறுவோமாக!



# சிவராத்ரியின் மகிமை

திரு. கே. தேவகிபிரகாஸம்-திருப்பதி

மாசி மாதம் கிருஷ்ணபக்ஷம் சதுர்த்தசி திதி திருவோணம் நக்ஷத்திரம் கூடிய புண்ணிய தினத்தன்று இப்பண்டிகை கொண்டாடப்படுகிறது.

நவராத்ரி அம்பாளுக்கு உகந்தது; சிவராத்ரி எம்பெருமானுக்கு உகந்தது; இரண்டுமே இரவில் கொண்டாடப்படும் பண்டிகைகள்.

சிவன் எழுந்தருளும் ராத்ரி-சிவனைத் தரிசிக்க வேண்டிய ராத்ரி-சிவனை அர்ச்சிக்க வேண்டிய ராத்ரி-சிவனோடு ஐக்யமாக வேண்டிய ராத்ரி-அது சிவ மயமான ராத்ரி! பஞ்சாக்ஷர மந்திரம் ஒலிக்கும் ராத்ரி-அபிஷேகங்களும் ஆராதனைகளும் நடக்கும் ஆனந்த ராத்ரி-தேவர்களும் முனிவர்களும் வணங்கி நிற்கும் ஒப்பற்ற ராத்ரி.

அண்ட சராசரங்களும் எம்பெருமானும் ஒடுங்கிய முகூர்த்த நாள் சிவ ராத்ரி. அன்றைய தினம் எங்கும் சிவ மயம்! எதிலும் சிவ மயம். எல்லாம் சிவ சொரூபம். அன்றைய தினம் சிவனைத் தவிர வேறு ஒரு வஸ்துவும் இல்லை.

சிவனுள் சக்தி அடக்கம் அல்லவா! சிவனோடு ஐக்கியமான சக்தியும் ஒன்று சேர்ந்து அருள்புரிகிறாள்.

பராசக்தி தமது பக்தர்களின் க்ஷேமத்தின் பொருட்டு பரமனைப் பூஜிக்கிறாள். சிவ பூஜை இல்லா விடில் நமக்கு சுபிட்சம் இல்லை.

எட்டு சிவ விரதங்களுள் சிவராத்ரியும் ஒன்று. விண்ணும் மண்ணும் காண அடிமுடி காண மாட்டாமல் ஒரு தாணு ஜோதியாய் நின்றார்! சிவபெருமான். அந்த நாள் தான் சிவராத்ரி.

திருமாலும் நான்முகனும் காண, தாணு மூர்த்தியாக நின்ற நிமலன், "இச்சிவராத்திரியன்று எம்மை வழி படுவோர்க்கு எல்லா மங்களங்களையும் அருளுவோம்" என்று திருவாய் மலர்ந்து அருளுகிறார்.

நதிகளில் சிறந்தது பாகீரதி. மரங்களில் சிறந்தது கற்பகத் தரு. பசுக்களில் உயர்ந்தது காமதேனு. யானைகளில் சிறந்தது ஐராவதம்-கடலுள் சிறந்தது திருப்பாற்கடல்-மலைகளில் உயரமானது கைலாசம் என்பது போல் விரதங்களில் சிறந்தது சிவ ராத்திரி.

சிவராத்ரி ஐந்து வகைப்படும், 1. நித்ய சிவராத்ரி, 2. பக்ஷ சிவராத்ரி, 3. மாஸ சிவராத்ரி, 4. யோக சிவ ராத்ரி, 5. மஹாசிவராத்ரி.

ஒவ்வொரு சதுர்த்தசியிலும் சிவ பூஜை செய்து ஒரு வருஷத்தில் 24 சிவ பூஜை புரிவது நித்ய சிவராத்ரி எனப்படும்.

தை மாத கிருஷ்ண பக்ஷ பிரதமை முதல் பதிமூன்று நாட்கள் நித்யம் ஒரே ஒரு வேளை பூஜித்து சதுர்த்தசியில் பூஜை செய்வது பக்ஷ சிவ ராத்ரி.

மாசி கிருஷ்ண சதுர்த்தசி-பங்குனி முதலில் வரும் திருதியை-சித்திரை கிருஷ்ண அஷ்டமி-வைகாசி முதல் அஷ்டமி-ஆனி சுக்ல சதுர்த்தி-ஆடி கிருஷ்ண பஞ்சமி - ஆவணி சுக்ல அஷ்டமி-புரட்டாசி முதல் த்ரியோதசி-ஐப்பசி சுக்ல சுவாதசி-கார்த்திகை முதல் சப்தமி அஷ்டமியும்-மார்கழி இரு பக்ஷ சதுர்த்தசிகள்-தை மாத சுக்ல திருதியை இவை மாத சிவராத்ரி.

ஸோம வாரத்தன்று 60 நாழிகையும் அமாவாசை இருந்தால் அது யோக சிவராத்ரி.

மாசி கிருஷ்ண சதுர்த்தசி மஹா சிவராத்ரி.

சிவபெருமான் சிவராத்ரியின் மகிமையை நந்தி தேவருக்கு உபதேசித்து அருளினார். நந்தி தேவர் சிவராத்ரியின மஹாத்மியத்தை எல்லா தேவர்களுக்கும், கணத்தவர்களும், முனிவர்களுக்கும் உபதேசித்து அருளினார்.

இத்தகைய சிவராத்ரி விரதத்தை பிரம்ம தேவர், திருமால், பார்வதி, ஆதிசேஷன், சரஸ்வதி அனுஷ்டித்து உள்ளனர்.

ஒரு சிவராத்திரி விரதம் அனுஷ்டிப்பது நூறு ஏகாதசி விரதம் அனுஷ்டித்த பலனைக் கொடுக்கிறது என்று புராணங்களில் சொல்லப்பட்டுள்ளது.

சிவராத்ரி விரதம் அனுஷ்டிப்போர்க்கு காசியில் முக்தி அடைந்த பலன கிட்டுகிறது.

ஆன்மாக்களின் துக்கத்தைப் போக்கிச் சுகத்தைத் தரும் ராத்ரி சிவராத்ரி!

ச்யாதி துக்காதிகமிதி சிவா
ராத்ரி சுகமிதி ராத்ரி.

சிவராத்ரி விரதம் அனுஷ்டிப்போர் முதல் நாளும் சிவராத்ரி அன்றும் உபவாசம் இருக்க வேண்டும்.

# விண்ணப்பம்

திருப்பதியிலுள்ள திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் தங்கு வசதிகளுக்காக முன்கூட்டியே செய்து கொள்ளும் இட ஒதுக்கீடுகளுக்கான தொகையினை எம். ஓ. மூலம் அனுப்புதலைவிட அத்தொகைக்கான வங்கி காசோலையை 'உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு) தி. தி. தேவஸ்தானம், திருப்பதி' அல்லது 'செயலாட்சித் தலைவர், தி. தி. தேவஸ்தானம் திருப்பதி' எனும் பெயரில் எடுக்கப்பட்டு, வருகை புரியும் நாள், வரும் நபர்களின் எண்ணிக்கை ஆகியவை கொண்ட முழுத் தகவல்களுடன் கூடிய கடிதத்துடன் (ஆங்கிலத்தில்) அனுப்புதல் விரைவான பயனைத் தரும்.

செயலாட்சித் தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

சிவராத்ரி அன்று வைகறைத் துயிலெழுந்து திருநீறு அணிந்து, உருத்திராக்ஷ மாலைகள் தரித்து, சிவபூஜை செய்து நமசிவாய நாம சிந்தையோடு ஆலயம் செல்ல வேண்டும். அம்பலத்தை 108 முறை வலம் வர வேண்டும். எம்பெருமானுக்கு 4 காலங்களிலும் நடைபெறும் விசேஷ பூஜைகளைக் கண்டு களிக்க வேண்டும்.

சிவராத்ரி பூஜைக்காக வில்வ தளம், அபிஷேகத்திற்காக நெய், தயிர், பால், தேன் மற்றும் பூஜைக்காக கரும்பு, இளநீர், சந்தனம் முதலியவைகளை க்ஷேத்ரங்களுக்குக் கொடுக்க வேண்டும்.

அன்றைய தினம் முழுவதும் உபவாசம் இருக்க வேண்டும். அதற்கு இயலாதவர்கள் ஸத்து மாவை வெல்லத்துடன் கலந்து ஒரே ஒரு வேளை உட்கொள்ளலாம். அல்லது வள்ளி கிழங்கை உப்பில்லாமல் சர்க்கரையில் வேக வைத்து உண்ணலாம்.

நான்காவது கட்ட பூஜை முடியும் பொழுது மறுநாள் பொழுது புலர்ந்து விடும். உடனே சென்று நீராடி, சிவன் கோவிலுக்குச்சென்று தரிசனம் செய்து சூரியனை உதித்து ஆறு நாழிகைக்குள் பாரணை செய்யவேண்டும்.

இத்தகைய சிவராத்ரி விரதத்தை உத்தியாபனஞ் செய்வோர்க்கு சகல சித்திகளும் கிட்டும். சகல சௌபாக்கியங்களும் பொங்கும்.

சிவராத்ரி வைபவத்தைப் பற்றி சிவபுராணம், லிங்க புராணம், ஸ்காந்தம், பத்மம் முதலிய பத்து புராணங்களில் பற்பல கதைகள் சொல்லப்படுகின்றன. அக்கதைகள் எல்லாம் சிவராத்ரியின் அருமை பெருமைகளை மிக அற்புதமாகச் சொல்லுகின்றன. ஸ்காந்தத்தில் வரும் கதை ஒன்று!

ஓர் அடர்ந்த காட்டில் அதிபலசாலியான வேடன் ஒருவன வாழ்ந்து வந்தான். அவன் பெயர் குருத்ருஹன். அவன் மிருகங்களை வேட்டையாடுவதோடு, வழி போக்கர்களிடம் கொள்ளை அடித்து வந்தான்.

ஒரு நாள் இவ்வேடன் வழக்கம் போல் வேட்டை ஆடுவதற்காக கானகம் வந்தான். பகலெல்லாம் வில்லும் அம்பும் ஏந்தி கானகம் எங்கும் வலம் வந்தான். அந்தி சாயும் நேரம் வந்தும், ஒரு மிருகமோ, ஒரு பறவையோ அவன் பார்வையில் படவில்லை. கானகத்தைச் சுற்றிச் சுற்றி வேடன் சோர்வுற்றான்.

இரவு நேரம் நெருங்கியது. வேடனுக்கோ, வேதனை தாளவில்லை. வீட்டிலே மனைவி, மக்கள், பெற்றோர் உணவின்றி வருந்துவார்களே என்று துக்கித்தான்.

அவனுக்கு ஒரு வழியும் தோன்றவில்லை. ஆகாரம் இன்றி வீட்டிற்குத் திரும்புவதில்லை என்ற வைராக்கியத்திற்கு வந்தான். அவன் வனத்தைச் சுற்றி வந்து கொண்டிருந்தான். அங்கே ஓர் தாடகத்தைக் கண்டான். அத்தாடகத்தைக் கண்டதும் அவனுக்கு ஓர் எண்ணம் தோன்றியது. "எப்படியும் மிருகங்கள் நீரைப் பருகுவதற்கு இத்தாடகத்திற்கு வந்துதானே ஆகவேண்டும். அப்பொழுது வேட்டையாடலாம்" என்று சிந்தையிலே கொண்டான். அடுத்துள்ள ஓர் வில்வ மரத்தின்மீது ஏறி அமர்ந்து கொள்ளக்கருதினான். குடுக்கையில் தண்ணீர் எடுத்துக் கொண்டு மளமளவென்று வில்வ மரத்தின்மீது ஏறி அமர்ந்து கொண்டான்.

அந்த வில்வ மரத்தின்கீழ் ஒரு சிவலிங்கம் இருந்தது. இறை தேடி வந்தவன் கண்ணுக்கு அரனை எங்கே தெரியப் போகிறது.

அன்றைய தினம் சிவராத்ரி! அதையும் அவன் எங்கே அறிந்தனன்! அவன் சிந்தையெல்லாம் பெற்றோர்களின் பசியைப் பற்றியே இருந்தது. அவன் மனம் பசிபசி என்று புலம்பியது.

முதல் ஜாமத்தில் பெண்மான் ஒன்று நீர் பருக தடாகம் வந்தது. வேடன் முகம் மலர்ந்தான். வில்லின் நாண் ஏற்றினான்; அம்பைத் தொடுத்தான். சோர்வினால் தளர்ந்து போன அவனது குறி தப்பியது. மரத்தில் உள்ள வில்வ தளங்களைத் துளைத்துக் கொண்டு அம்பு தாடகத்தில்

போய் வீழ்ந்தது. வில்வ தளங்களோ, மரத்தடியில் இருந்த சிவ லிங்கத்தின் மீது வர்ஷித்தது. அவன் கையில் இருந்த உடுக்கை நீர் தளும்பி சிவ லிங்கத்தின்மீது அபிஷேகம் செய்தது, அவனை அறியாமலேயே முதல் ஜாமத்தில் சிவனுக்கு அபிஷேகமும் அர்ச்சனையும் நடந்தது.

இந்த அறியாது செய்த பூஜைக்கு பலன் கிட்டியது. எம்பெருமான் அவன்மீது திருவுள்ளம் கொண்டு அவனைப் பற்றிய பாபங்களை நீங்கச் செய்தார்.

பசிபசி என்று துடித்தவன் மனம் சிவா சிவா என்றது.

இந்த சலசலப்பில் நீர் பருக வந்த பெண் மான் வேடனைக் கண்டது.

தப்பித்துப் போக வழி தெரியாமல் தவித்தது. மானைக் கண்ட வேடன், "ஏய் பெண் மானே! நானும், என் பெற்றோர்கள், என் மனைவி, மக்கள் யாவரும் பசியால் வாடுகின்றோம். அதனால் நான் உன்னைக் கொல்லப் போகிறேன்" என்று கூறியவாறு குறி வைத்துப் பார்த்தான்.

வேடனின் கணையில் இருந்து தப்பித்துக் கொள்ள நினைத்த பெண் மான் கீழ்கண்டவாறு கூறியது.

"நற்குணம் கொண்டவனே! இந்த மானின் உடலால் உன் குடும்பம் பசியாறும் என்றால் அதனை நான் பெரும் பாக்கியமாகவே கருதுகிறேன். எனக்கு நீ ஒரு உதவி செய்ய வேண்டும். என் வீட்டில் என் தங்கையும், கணவனும், குழந்தைகளும் எனக்காகக் காத்து இருப்பர். நான் அங்கு சென்று என் தங்கையை என் கணவருக்கு மனைவியாக்கி விட்டு வருகிறேன் இது சத்தியம்."

ஆரம்பத்தில் மானின் மொழிகளை வஞ்சக வார்த்தைகள் என்று எண்ணிய வேடன் மானின் அடுத்தடுத்து வந்த தாழ்மையான வேண்டுகோளைக் கேட்டு, அதன்மீது இரக்கம் கொண்டான். அதனைச் சென்று வருமாறு விடை கொடுத்து அனுப்பினான்.

இவ்வாறு வேடனுக்கும் மானுக்கும் நடந்த வாதப் பிரதி வாதம் முடிவதற்கும் முதல் ஜாமம் முடிவதற்கும் சரியாக இருந்தது.

நீர் பருகச் சென்ற மான் நெடு நேரமாக வராதது கண்டு, வீட்டில் இருந்த அதன் சகோதரி மான் அதனைத் தேடுவதற்காக தடாகத்தை வந்தடைந்தது. இந்த மானைக் கண்ட வேடன் முன்போல் வில்லில் நாண் ஏற்றினான்.

இந்தச் சமயத்தில் வேடன் கைகள் பட்டு முன்போல் வில்வ தளங்கள் உதிர்ந்து சிவலிங்கத்தின்மீது வீழ்ந்தது. குடுவையில் இருந்த நீரும் சற்று சிந்தியது. வேடன், பெருமானின் இரண்டாவது ஜாம பூஜை செய்த பாக்கியவான் ஆனான். அவனுக்கு மேலும் புண்ணியம் சேர்ந்தது.

வேடன் இம்முறையும் இந்த மானைக் கொல்லக் கருதினான். வேடன் நயவஞ்சமாகப் பேசினான்; மானோ வேடனிடம் நயமாகப் பேசித் தப்பித்தது. இதற்குள் இரண்டாம் ஜாமம் முடிவடைந்தது.

இதற்குள் இவ்விரண்டு மான்களையும் தேடிக் கொண்டு ஆண் மான் தடாகத்தை வந்தடைந்தது. ஆண் மானைக் கண்ட வேடன் இம்முறையும் வில்லில் நாண் ஏற்றினான். இம்முறையும் வில்வ தளங்களும், நீரும் சிவ லிங்கத்துக்கு பூஜை செய்வது போல் வீழ்ந்தன

## எம்பெருமானின் மூன்று திருக்கோலங்கள்

நின்ற திருக்கோலம்—63 ஸ்தலங்கள்.
வீற்றிருந்த திருக்கோலம்—21 ஸ்தலங்கள்.
பள்ளி கொண்ட திருக்கோலம்—27 ஸ்தலங்கள்.
மொத்தம் 108 ஸ்தலங்கள்.

## எம்பெருமான் தானே தோன்றிய ஸ்தலங்கள்

1. திருவரங்கம்,
2. திருவேங்கடம்,
3. ஸ்ரீ முஷ்ணம்,
4. வான மாமலை,
5. நைமிசாரண்யம்,
6. பத்ரிகாஸ்ரமம்,
7. புஷ்கரம்,
8. சாளக்கிராமம்.

## திவ்யகவி பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் இயற்றிய அஷ்ட ப்ரபந்தம்

1. திருவரங்கக் கலம்பகம்.
2. திருவரங்கத்து மாலை.
3. திருவரங்கத்தந்தாதி.
4. சீரங்க நாயக ரூசல்.
5. திருவேங்கட மாலை.
6. திருவேங்கடத்தந்தாதி.
7. அழகரந்தாதி.
8. நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி.

—தி. வி. பார்த்தசாரதி, காஞ்சிபுரம்.

மூன்றாம் ஜாம பூஜைநடந்து முடிந்தது.

வேடன் அதனிடம் மற்ற மான்களிடம் கூறியது போலவே, தனது எண்ணத்தைக் கூறினான். இந்த ஆண் மானும் மற்ற மான்களை போல், தான் வீட்டிற்குச் சென்று திரும்பி வருவதாக வாக்குக் கொடுத்தது.

ஏற்கனவே இரு மான்களிடமும் ஏமாந்து போன வேடன், இம்முறை இந்த ஆண் மானின் வார்த்தைகளை நம்ப மறுத்தான். ஆனால் அந்த ஆண் மான் "கண்டிப்பாக வருவேன்" என்று சத்தியம் செய்து கொடுத்து வீட்டிற்குச் சென்றது.

இதற்குள் மூன்றாம் ஜாம பூஜை முடிவுற்றது.

ஆண் மான் வீட்டிற்குச் சென்றது. மற்ற இரு மான்களும் அங்கே இருப்பதைக் கண்டது. அந்த மூன்று மான்களும் சத்தியத்துக்குக் கட்டுப்பட்டிருந்தன. அதனால் மூன்றும் தாம் தான் வேடனுக்குப் பலியாக வேண்டும் என்று சொல்லியன. முடிவில் மூன்றும் ஒன்றாகச் சென்று வேடனுக்குப் பலியாவது என்ற தீர்மானத்திற்கு வந்தன. அந்த மூன்றும் ஒன்று சேர்ந்து தனது குட்டிகளை மற்ற மான்களின் பாதுகாப்பில்விட்டு விட்டு வேடனிடம் வந்தன.

நான்காம் ஜாம காலத்தில் வேடன், மான்களின் வரவை எதிர்பார்த்து நின்று கொண்டு இருந்தான். அவன் எதிர்பார்த்தது போல் மூன்று மான்களும் வந்து சேர்ந்தன.

வேடனுக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை! முன்போல் வில்லில் நாண் ஏற்றினான்.

இம்முறையும் அவனால் வில்வ தளங்கள் சிவலிங்கத்தின்மீது உதிர்ந்தன. குடுவையில் இருந்த நீரும் சிந்தியது. வேடன் எம்பெருமானுக்கு நான்காவது ஜாம பூஜை செய்த பலனைப் பெற்றான்.

அவனது உடலைப் பற்றி யிருந்த அத்தனை பாபங்களும் அறவே விலகியது. மிருக வெறி பிடித்த வேடன் பற்றற்ற பரம ஞானி போலானான்.

மரத்தில் இருந்து கீழே இறங்கினான். சிவலிங்கப் பெருமானை வணங்கி நின்றான். இதற்குள் மூன்று மான்களும் அவனிடம், "ஏய் வேடவா! இன்னும் தாமதம் செய்யாதே. எங்கள் உயிரை எடுத்துக் கொண்டு எங்களுக்கு நல்ல புண்ணியத்தைச் சேர்ப்பாயாக!" என்று வேண்டிக் கொண்டன.

வேடன் அவைகளைப் பார்த்து, "மான்களே! உங்களைக் கொன்று பாபத்தைத் தேடிக் கொள்ள நான் விரும்பவில்லை. ஐந்தறிவு படைத்த விலங்கினங்களாகிய நீங்கள் தர்மத்துக்குக் கட்டுப்பட்டு வாழும்போது ஆறறிவு படைத்த நான் இனியும் அறிவிலியாக வாழ்வதா? கூடாது. உங்களை நான் கொல்லப் போவதில்லை. நீங்கள் சந்தோஷமாக உங்கள் இருப்பிடத்திற்குச்செல்லுங்கள்" என்று இயம்பினான்.

இவ்வாறிருக்க, மான் குட்டிகள் இந்த மான்களைத் தேடிக்கொண்டு தடாகத்தை வந்தடைந்தன.

அங்கு பேரொளி பொங்கியது. எம்பெருமான் ஐந்து திருமுகங்களோடு கூடிய அருள் வடிவமாக வேடன் முன்னால் எழுந்தருளினார்.

வேடன் நிலத்தில் வீழ்ந்து எம் பெருமானை பன்முறை வணங்கினான். எம்பெருமானார் அவனுக்கு கைலாச ப்ராப்தியை அளித்து அனுக்கிரஹித்தார். மானைக் கொல்ல வந்தவன், மானேந்திய மகா தேவனைத் தரிசித்த பாக்கியத்தால் நற்பயனைப் பெற்றான். மான்களும் சிவ தரிசனத்தால் பெற்ற பாக்கியத்தால் "ம்ருக சீர்ஷம்" என்ற நக்ஷத்ரங்களாக மாறின.

சிவராத்ரி விரதத்தை அறியாமலேயே செய்வோர்க்கு சிவசாயுஜ்ய பதவி கிட்டுகிறதென்றால் பக்தி சிரத்தையுடன் விரதம் இருந்து அவனை வழிபடுவோர்க்கு எப்பேர்ப்பட்ட நற்கதி கிட்டும் என்பதனைச் சொல்லவும் வேண்டுமோ?



## விண்ணப்பம்

தி. தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரர் கோயிலில் நடைபெறும் ஆர்ஜித சேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத் தொகையினை தேசீயமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராஃப்ட்' (D. D.) அல்லது 'பேஆர்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்பவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

# மெய்ப்பொருள்

மெய்ப்பொருள் என்பது வேதாந்தத்தைக் குறிக்கின்றது. வேதம் என்பது இயற்கை. இயற்கைக்கு அப்பாற்பட்டவர் மெய்ப்பொருள் ஆகின்றார். வேதத்திற்கு அப்பாற்பட்டதாய் இருப்பதால் மெய்ப்பொருளை வேதாந்தம் என்றும் சொல்லலாம். ஐம்புலன்களுக்கும், மனதுக்கும் புலனாவது எதுவோ அது வேதம் அல்லது இயற்கை ஆகின்றது. ஐம்புலன்களுக்கும் மனதுக்கும் அப்பாற்பட்டது எதுவோ அது மெய்ப்பொருள் அல்லது வேதாந்தம் ஆகின்றது.

**திரு. கே. சுகுமாரன், எம்.ஏ.**
**மன்னார்குடி.**

"உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்" என்பது கோட்பாடு. எல்லாவற்றிற்கும் மேலான பொருளாய் இருப்பது வேதாந்தம். எனவே வேதத்தைப் பற்றிய சிந்தனை உயர்ந்த சிந்தனையாகிறது. இனி வேதாந்தத்திற்கு திருமூலர் தருகின்ற விளக்கத்தை ஆராய்வோம். திருமூலருடைய பாடல் வருமாறு!

"வேதாந்தம் கேட்க விரும்பிய வேதியர்
வேதாந்தம் கேட்டும்தம் வேட்கை ஒழிந்திலர்
வேதாந்த மாவது வேட்கை ஒழித்திடம்
வேதாந்தம் கேட்டவர் வேட்கை விட்டாரே."

இவ்வுலகத்துக்கு வந்துள்ள உயிர்கள் எல்லாம் எங்கிருந்து வந்திருக்கின்றன என்ற கேள்வி எழலாம். உயிர்கள் எல்லாம் மெய்ப்பொருள் அல்லது வேதாந்தத்திடமிருந்து புறப்பட்டு வந்திருக்கின்றன. வித் என்றால் அறிதல் என்று பொருள். வேதம் என்றால் இயற்கை, வேதவித் என்றால் இயற்கையை அறிபவன் என்று பொருள். இயற்கை அறிவு புலன்களைக் கொண்டும் மனதைக் கொண்டும் பெறுகின்ற அறிவு ஆகிறது. இதற்கு அபரவித்தை என்று பெயர். புலன்களுக்கும் மனதுக்கும் மேலான அறிவுக்குப் பரவித்தை என்று பெயர். வாலறிவு என்றும் அதைச் சொல்லலாம். வேதாந்தத்தைப்பற்றி அறிந்து கொள்ள வேதியர்கள் விரும்புகிறார்கள். அவர்கள் அந்தணர்கள் என்றும் அழைக்கப்படுகிறார்கள். 'அந்தணர் என்போர் அறவோர்' என்று அந்தணர்களுக்கு விளக்கம் தரப்பட்டிருக்கிறது. 'மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்திறன்' என்று அறத்திற்கு விளக்கம் தரப்பட்டிருக்கிறது. மனதை மாசற்றதாக்கி அறவழியில் நிற்கின்ற அந்தணர்கள் மெய்ப்பொருளைப்பற்றி அறிய விரும்புகின்றனர்.

உபாதிகள் எல்லாம் ஒழிந்த பிறகு எஞ்சியிருப்பது எதுவோ அது மெய்ப்பொருள். "வான் கெட்டு மாருதம் மாய்ந்து அழல்நீர் மண்கெடினும் தான் கெட்டல் இன்றிச் சலிப்பறியாத் தன்மையன்" என்று மெய்ப்பொருளுக்கு மாணிக்கவாசகர் விளக்கம் தருகிறார். பிரளய காலத்தில் நிலம் நீரிலும், நீர் நெருப்பிலும், நெருப்பு காற்றிலும், காற்று ஆகாயத்திலும், ஆகாயம் மூலப்பிரகிருதியிலும் ஒடுங்குகின்றன. மூலப்பிரகிருதி மெய்ப்பொருளில் ஒடுங்குகிறது. மெய்ப்பொருள்தான் எஞ்சி இருக்கிறது. அம்மெய்ப்பொருள் மயமாவதற்கு "ஊன்கெட்டு உயிர் கெட்டு உணர்வு கெட்டு என் உள்ளமும் போய் நான் கெட்ட வாபாடித் தெள்ளேணம் கொட்டாமோ" என்று கூறி மாணிக்கவாசகர் வழிகாட்டுகிறார். ஜீவன் தன் வியக்தியை மேற்கூறியவாறு கரைத்து மெய்ப்பொருளோடு ஒடுக்கினால் அவன் மெய்ப்பொருள் மயமாகின்றான். உடலைத்தான் என்று அகங்கரிப்பது அகங்காரமாகும். தன்னை உடல் மயமாகக் கருதுபவன் 'நான் நெட்டையன், குட்டையன், கறுப்பன் சிவப்பன்' என்று கூறிக் கொள்கின்றான். உடல் மயமாக எண்ணிக் கொண்டிருப்பதை ஒழிக்க வேண்டும். அதை ஊன் கெட்டு என்று சொல்கின்றார். சரீரப்பற்று ஒழிந்து போய்விட்டால் ஊன் கெடுதலாகிறது. நான் சக்தி வாய்ந்தவனாய் இருக்கின்றேன் என்று அகங்கரிப்பது உயிர்ப்பற்று ஆகிறது. உயிர்ப்பற்று போய்விட வேண்டும். உயிர் மயமாகத் தன்னை எண்ணிக் கொண்டிருக்கின்ற எண்ணத்தை ஒழித்துவிட வேண்டும். உயிர் இருந்தால்தான் செயல் நிகழும். உயிர் இல்லாவிட்டால் உடல் செயலற்றதாய்ப்போய்விடும். உயிரை நாம் சக்தி மயமாகப் பாராட்டுகின்றோம். சக்தி இல்லையென்றால் சிவமே சவமாகிவிடும். இதை விளக்கும் ஒரு நிகழ்ச்சியைச் சங்கரர் வாழ்க்கையில் காண்போம்.

சங்கரர் காசியில் இருந்தபொழுது கங்கையில் ஸ்நானம் செய்துவிட்டுக் காசி விசுவநாதரைத் தரிசிக்கக் குறுகலான சந்தின் வழியே போய்க்கொண்டிருந்தார். அச்சந்தின் குறுக்கே சவம் ஒன்றை படுக்க வைத்து மாது ஒருத்தி புலம்பிக் கொண்டிருந்தாள். சவத்தைத் தாண்டிக் கொண்டு போகக் கூடாதாகையால் சங்கரர் அம்மாதுவிடம் பகர்ந்ததாவது; 'நான் விசுவநாதர் தரிசனத்திற்குப் போக வேண்டும். குறுக்கே கிடக்கும் இச்சவத்தை எடுத்து நெடுக்கே போட்டுப் போவ

### தி. தி. தேவஸ்தானத்தாரின

## ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்

### தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

*5-00* முதல் *5-30* வரை—சுப்ரபாதம்
*5-30* ,, *6-00* ,, —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-00
(நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)
*6-00* ,, *6-30* ,, —சுத்தி—முதல்மணி
*6-30* ,, *11-30* மதியம்—ஸர்வதரிசனம்
*11-30* ,, *12-30* ,, —சுத்தி, 2-வது மணி
*12-00* ,, *6-00* மாலை —ஸர்வதரிசனம்
*6-00* ,, *6-30* ,, —சுத்தி, 3-வது மணி
*6-30* ,, *9-15* இரவு —ஸர்வதரிசனம்
*9-15* ,, *9-30* ,, —சுத்தி, ஏகாந்தசேவை

காலை

### வெள்ளிக்கிழமைகளில்

*9-00* ,, *10-00* ,, —அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்)
*9-00* ,, *10-00* ,, —அபிஷேக தரிசனம் (ரூ. 2/- நபர் ஒருவருக்கு)

### ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

1 தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 5/- (நபர் ஒருவர்க்கு)

| ஆர்ஜித நைவேத்தியங்கள் | | | ஆர்ஜித சேவைகள் | |
|---|---|---|---|---|
| (அ) பொங்கல் | ,, | ரூ. 110/- | (அ) திருச்சி உற்சவம் | ரூ. 63-00 |
| (ஆ) புளியோரை | ,, | ரூ. 100/- | (ஆ) யானை வாகனம் | ரூ. 82-00 |
| (இ) தத்யோதனம் | ,, | ரூ. 75/- | (இ) தோலோற்சவம் | ரூ. 160/- |
| (ஈ) கேஸரிபாத் | ,, | ரூ. 180/- | (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்) | |
| (உ) சர்க்கரைப் பொங்கல் | ,, | ரூ. 135/- | (ஈ) திருப்பாவாடை (கிருஹஸ்தர்க்கு 5 கிராம் எடையுள்ள வெள்ளிடாலர் கொடுக்கப் படும்) | ரூ. 2000/- |
| (ஊ) தோசை | ,, | ரூ. 300/- | (அர்ச்சனை(அஷ்டோத்ரம்)செய்ய விரும்பும் பக்தர்கள் அதற்கான ரூ. 1-50க்கான டிக்கெட்டினைக் கோயிலிலேயே வாங்கிக் கொள்ளலாம். இதுபோது பக்தரின் பெயரும், கோத்ரமும் வாசிக்கப்படும்) | |
| (எ) ஸாகரபாத் | ,, | ரூ. 150/- | | |
| (ஏ) ஸீரா | ,, | ரூ. 300/- | | |

* திருப்பதியிலிருந்து 5 கி. மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

தற்கு வழிவிடு" என்று கூறினார் அம்மாது சங்கரரிடம் கூறியதாவது; "குறுக்கே கிடக்கின்ற சவத்தை எழுந்து நெடுக்காகப் படுக்கும்படி சவத்திற்கு நீங்கள் உத்தரவு போடுங்கள்." "சவம் எழுந்து நெடுக்கே படுப்பதற்கு அதற்கு சக்தி ஏது!" என்று சங்கரர் கேட்டார். "சக்தி இல்லாதது சவம் தானே" என்று அவ்வம்மையார் கூறினார்கள். சங்கரர் விழிப்படைந்தார். "தாயே, நீங்கள் யாராக இருந்தாலும் எனக்கு குரு ஆகின்றீர்கள்" என்று அந்த அம்மையின் காலில் சங்கரர் விழுந்தார். சவமாகக் கிடந்தது சிவனும், புலம்பிக் கொண்டு பெண்ணாக இருந்தது சக்தியும் ஆவார்கள். சிவசக்தியாகச் சங்கரருக்குக் காட்சி கொடுத்துச் சக்தியின் மகிமையை அவர்கள் விளக்கினார்கள்.

உணர்வு மயமாக இருப்பது உள்ளம். உணர்வு கெட்டு என்பது உள்ளத்தில் உள்ள பிரபஞ்ச உணர்வு கெட்டுப் போவதைக் குறிக்கிறது. உடலாக எண்ணிக் கொண்டிருந்த நான், உயிராக எண்ணிக் கொண்டிருந்த நான், உணர்வாக எண்ணிக் கொண்டிருந்த நான் ஒழிந்து போனால் மெய்ப்பொருள் தான் மிச்சம் இருக்கிறது. அதுதான் யாவற்றுக்கும் ஆதாரமாக இருக்கிறது. அதுவே வேதாந்தம் அல்லது மெய்ப்பொருள் ஆகிறது. வேதாந்தத்தை அறிந்து கொள்ள விரும்புகிறவர்கள் வேதியர்கள் என்று சொன்னோம். உடல் பிறப்பு எல்லா உயிர்களுக்கும் பொது. மனிதன் உடலில் வாழ்கின்ற பொழுது மற்றொரு பிறப்பு எடுக்கின்றான். அதை ஞானப் பிறப்பு என்று சொல்கின்றோம். காயத்ரி மந்த்ரம் அறிவைப் பற்றிய தியானம் ஆகிறது. 'எந்த அறிவுப் பொருள் நம் அறிவைத் தூண்டுகிறதோ அந்தச் சுடர்க் கடவுளின் மேலான ஒளியை நாம் தியானிப்போமாக' என்பது காயத்ரி மந்த்ரத்தின் பொருள். நாம் உடல்

சொரூபம் அல்ல. நாம் அறிவு சொரூபம் என்பதைக் காயத்ரி மந்திரம் நம் உள்ளத்தின்கண் பதிய வைக்கிறது. உடல் சுகம் வேண்டுமென்று பாடுபடுகின்றவர்கள் தேகாத்ம புத்தி படைத்தவர்கள் ஆகிறார்கள். ஆத்ம ஞானத்துக்காகப் பாடுபடுபவர்கள் வேதியர்கள் ஆகின்றார்கள். ஆத்ம ஞானம் பெற விழைகின்றவர்கள் அரியரினும் அரியராவார்கள்.

ஜீவாத்மன் சரீரத்தை ரதமாகவும், புத்தியைச் சாரதியாகவும், மனதை பிடி கயிறாகவும், இந்திரியங்களைக் குதிரைகளாகவும் கொண்டு மெய்ப்பொருளை நோக்கி யாத்திரை செய்து கொண்டிருக்கின்றான். தன்னை உடல் மயமாகவும், மனோ மயமாகவும், இந்திரியங்கள் மயமாகவும் கருதிக்கொள்கிறவன் ஜீவாத்மாவாகிறான். பரம்பொருளை அடைவதற்கும், மற்ற உயிர்களுக்கு நலம் செய்வதற்கும் ஜீவாத்மா உடலைப் பெற்றிருக்கின்றான். இந்த நல்ல காரியங்களை இவ்வுடலைக் கொண்டு செய்து கொண்டு இருப்பதற்கிடையில் இவ்வுடலைத் தன் மயமாக எண்ணிக் கொள்ள வேண்டிய அவசியமில்லை. ஆனால் ஜீவாத்மாக்கள் அந்தத் தவறைச் செய்து விடுகின்றனர். உடல் எதற்காக அமைந்திருக்கிறது என்ற உண்மையை அறிந்திருந்த திருமூலர்,

'உடம்பினை முன்னம் இழுக்கென்றிருந்தேன்
உடம்பினுக்குளளே உறுபொருள கண்டேன
உடம்புளே உத்தமன கோயில் கொண்டான என்று
உடம்பினை யானிருந்து ஒமபுகினறேனே'

என்று கூறுகிறார். உடம்புக்குள்ளே உத்தமன் கோயில் கொண்டிருக்கிறான என்பதை அறிந்து அவ்வுத்தமனை அடைவதற்கு உடலைக் கொண்டு நல்ல காரியங்களைச் செய்ய வேண்டும்.

உடலோடும், இந்திரியங்களோடும், மனத்தோடும் தன்னைப் பிணித்துக் கொள்கின்ற ஜீவாத்மன் முதலில் அந்தப் பிணிப்பில் இருந்து தன்னை விடுவித்துக் கொள்ள வேண்டும். அப்படி விடுவித்துக் கொள்வதற்குத் தான் உடல், இந்திரியம், மனம் அல்லஎன்றும், தான் ஆத்மசொரூபம் என்றும் எண்ண வேண்டும். அந்த எண்ணம் ஆழ்ந்தது ஆகஆக உடல், மனம், இந்திரியங்களைத் தன் மயமாக்குகின்ற எண்ணம் ஒழிந்துவிடும். மெய்ப்பொருளிடம் இருந்து வந்த நாம் உபாதிகள் பலவற்றை உணடு பண்ணிக் கொணடு அவ்வுபாதிகள் மயமாக நம்மைக் கருதுகின்றோம். நாம உணடு பணணிக்கொள்கின்ற உபாதிகளை ஒழித்துவிட்டு மெய்ப்பொருள் நாம் எனபதை உணரும் போதுதான் நம் யாத்திரை நிறைவு அடைகின்றது. ஸ்ரீ ராமகிருஷ்ணர் இவ்வுணமையை ஒரு உபமானத்தின் மூலம் விளக்குகிறார். "கடல் நீர் வெப்பத்தினால் ஆவி ஆகிறது. அந்த ஆவி வேகமாகி மேகம் குளிர்ந்து மழையாகப் பொழிகிறது....மழைநீர் நதிகளாகப் பெருக்கெடுத்து ஓடுகின்றது. இறுதியில் மழைநீர் கடலைப் போய்ச் சேர்கின்றது. கடலில் இருந்து புறப்பட்ட நீர் கடலைப் போய்ச் சேர்கின்ற பொழுதுதான் அதன யாத்திரை நிறைவு பெறுகின்றது. அங்ஙனம் மெய்ப்பொருளில் இருந்து புறப்பட்ட உயிர்கள் மெய்ப்பொருளைப் போய்ச் சேர்கின்ற பொழுதுதான் அவைகளுடைய யாத்திரை நிறைவு பெறுகின்றது." ஆகையால் நாம் புறப்பட்ட இடமாகிய மெய்ப்பொருளை உணர்கின்ற பொழுதுதான் நம் யாத்திரை நிறைவு பெறுகின்றது.

உளளத்தில் மெய்ப்பொருள் நாட்டம் உண்மையில உணடாகிவிடுமானால் உள்ளத்தில் இருந்து உலக ஆசை ஒழிந்து பாகும். துன்புற்றிருப்பதற்காக உலகப் பொருள்களினமீது ஆசை காள்கின்றோம். உலகபபொருளகளை நாடிப் போவது இன்பத்தைப் பெறுவதற்கேயாம். உலக நாட்டம் சுகததைத் தருவதறகுப்பதிலாக ஆசையைப் பெருக்கி அல்லலை வளர்க்கிறது. உலக ஆசை அளவுக்கு உட்படாததாக இருக்கிறது. 'ஆசைக்கோர் அளவில்லை'

# விண்ணப்பம்

'ஸப்தகிரி' மாத இதழுக்கான தொகையை 'மணியார்டர்' மூலமாக அனுப்புதல் பயனுள்ளதாக அமையும். மணியார்டர் கூப்பனில் தங்கள் முகவரியினை ஆங்கிலத்தில்எழுதுவதும், பழைய சந்தாதாரராக இருந்தால் தங்கள் சரியான சந்தா எண்ணை மறக்காமல் குறிப்பதுவும் 'ஸப்தகிரி' நிருவாகப்பணியினை எளிதாக அமைக்கும். தொகை அனுப்பியும் இதழ் பெறாதவர்கள், தாங்கள் எழுதும் புகார்க் கடிதத்தில் மணியார்டர் எண்,செய்த தொகை, அனுப்பிய தேதி ஆகிய விவரங்களுடன் தங்கள் முழு முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொண்டால் விரைவில் செயலாற்ற உதவும். சந்தாதாரர்களின் முழு ஒத்துழைப்பையும் எதிர்பார்க்கிறோம்.

— ஆசிரியர்.

# நித்ய அபிஷேக ஸேவை

யாத்திரிகளின் வசதிக்காக திருப்பதியிலுள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி கோயிலில் புதியதாக "நித்ய அபிஷேக ஸேவை" ஒன்று புகுத்தப்பட்டுள்ளது.

இந்த ஸேவையில் பங்கேற்க விரும்பும் பக்தர்கள் ஆண்டொன்றுக்கு ரூ. 42/- செலுத்துதலோ அல்லது தேசியமாக்கப்பட்டுள்ள வங்கி ஏதேனும் ஒன்றில் "செயலாட்சித் தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி." எனும் பெயரில் ரூ. 500/- முதலீடு செய்தலோ வேண்டும். முதலீடு செய்யப்பட்ட தொகைக்குக் கிடைக்கப்பெறும் வட்டித்தொகையினைக் கொண்டு தொடர்ந்து கிருஹஸ்தரின் பெயரில் நிரந்தரமாக ஸேவை நடத்தப்பெறும். பெரியவர்கள் இருவர் வருடத்திற்கு இருமுறை இச்ஸேவைக்கு அனுமதிக்கப்படுவர்.

நிரந்தரமாக தொடர்ந்து இச்ஸேவையினை நடத்த விரும்புவர் முதலாண்டுக்கான ரூ. 42/- செலுத்துவதோடு ரூ. 500/- செலுத்துதல் வேண்டும்.

திருப்பதி நகரத்திலிருந்து 2 கி. மீ தொலைவில் ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி கோயில் உள்ளது. கோயில் வளாகத்திற்குள் ஆழ்வார் தீர்த்தம் எனும் திருக்குளம் ஒன்றுள்ளது. காலையிலும் மாலையிலும் அபிஷேகம் நாளும் இக்கோயிலில் நடைபெறுகிறது.

---

என்று தாயுமானவர் பகர்கிறார். பிரபஞ்சம் முழுவதும் நமக்குச் சொந்தமாகி விட்டால் சந்திர லோகத்தையும், சூரிய லோகத்தையும் நமக்குச் சொந்தமாக்க வேண்டும் என்ற ஆசை உண்டாகும். உலக ஆசை இங்ஙனம் வளர்ந்து கொண்டு போகுமேயன்றி அது பூர்த்தியாவதில்லை. ஆகவே உலக வசதிகளைப் பெருக்கிக் கொண்டே இருப்பவன் ஆசையை வளர்த்துக் கொண்டே இருப்பவன் ஆகின்றான். உலகப் பொருட்களை நாடிப் போனாலோ, உலக விஷயங்களைக் கேட்டாலோ ஆசை பெருகும். ஆனால் மெய்ப் பொருளை நாடிப் போனாலோ, மெய்ப் பொருளைப்பற்றிக் கேட்டாலோ ஆசை பூர்த்தியாகி நிராசை உண்டாகிறது. மெய்ப்பொருள் ஞானம் உள்ளத்திலுள்ள உலக ஆசையை ஒழித்துத் தெய்வீகப் பற்றை வளர்க்கிறது. இதனையே 'வேதாந்தம் கேட்டவர் வேட்கை விட்டாரே' என்று திருமூலர் கூறியுள்ளார்.

பசி வரும்போது உணவு உட்கொள்கின்றோம், உண்டபின் பசி தணிந்துவிடுகிறது. சாப்பிட்ட பின்னும் பசிக்குமானால் அவன் சாப்பிட்டது உணவு அன்று; பசியை உண்டாக்கும் மருந்தாக இருக்க வேண்டும். அங்ஙனம் வேதாந்தம் அல்லது மெய்ப்பொருளைக் கேட்டவர்கள் உள்ளத்தில் ஆசை வளர்ந்து வருமானால் அவர்கள் வேதாந்தம் கேட்டவர்கள் ஆவார். மெய்ப்பொருள் நாட்டம் ஆசையை ஒழிப்பதாகும். மெய்ப்பொருளை உண்மையில் நாம் நாடுகின்ற பொழுது ஆசை தானாகவே ஒழிந்துபட்டுப் போகிறது. வள்ளுவர்,

"பற்றுக பற்றற்றான் பற்றினை
அப்பற்றைப்
பற்றுக பற்றுவிடற்கு"

என்று கூறுவார். மேற்குத் திசையை நோக்கிச் சென்றால் கிழக்குத் திசை பின்னணிக்குப் போகும். அங்ஙனம் கடவுள் பற்று ஓங்கி வந்தால் உள்ளத்திலிருந்து உலகப்பற்று அகன்று விடும். உள்ளத்தில் உலகப்பற்று ஒழியவில்லை என்றால் ஆங்கு கடவுள்பற்று உண்டாகவில்லை என்பது தெளிவு. தெய்வப்பற்றை வளர்த்து வருவதற்கும், உலகப்பற்றை அகற்றுவதற்கும் நாம் செய்கின்ற செயல் ஆத்ம சாதனை ஆகும். மெய்ப்பொருள் நாட்டம் உடையவர்களுக்கு உலக நாட்டம் போய்விடும். மெய்ப்பொருளை உணர்ந்து பேரின்ப பெருவாழ்வு பெறுவோமாக.







# திருவேங்கடவனும் திருமங்கையாழ்வாரும்

திருவேங்கடம் என்றாலே பாபங்களைத் தீயில் பட்ட பஞ்சு போல் போக்கக்கூடிய சிறந்த மலை என்பது தான் பொருள். எனவே மன்னனாய் இருந்து ஆழ்வாரான திருமங்கையாழ்வாரின் உள்ளம் "திருவேங்கடம் அடை" என்று ஆழ்வாரைத் தூண்டியது. ஆழ்வார் திருவேங்கடம் என்னும் திருப்பதிக்குப் புறப்பட்டார். மிகவும் சிரமப்பட்டுத் திருமலையை அடைந்துதிருவேங்கடவனைத் தரிசித்தார்.

ஆனால் திருவேங்கடவனோ, 'ஆழ்வார் சிரமப்பட்டு ஆவலுடன் வந்து தன்னை வணங்கினாரே! அவரை இன்முகம்காட்டி, இனிய வார்த்தைகள் மூலம் நலம் விசாரிக்க வேண்டுமே' என்று கருதாமல் பேசாமல் இருந்து விட்டார். இதைக் கண்ட ஆழ்வார் மிகவும் மனம் வருந்தினார்.

இப்படி வேங்கடவன் புறக்கணித்தது தன் தீவினைப் பயனே என்று துயரப்பட்டு உள்ளம் உருகினார். பலவாறு புலம்பினார். கண்ணீர் விட்டு அழுதார். தனது தீவினைகளைப் போக்கி, திருவருள் புரியுமாறு வேண்டினார். உடலும், உள்ளமும் தளர்ந்து மயங்கி விழுந்தார்.

இதைக் கண்டு மனம் தளர்ந்தார் கருணைக்கடலான வேங்கடவன். ஆழ்வாரின் கனவில் தோன்றினார். அவருடன் பேச ஆரம்பித்தார்.

**திருவேங்கடவன் :**

திருமங்கைமன்னரே! நான்உம்மை வரவேற்று உபசரிக்கவில்லையென்று மனம் வருந்துகின்றீர். நீர் எமக்கோ அல்லது எனது அடியார்களுக்கோ என்ன தொண்டு செய்துள்ளீர்! தொண்டு செய்து வாழாத மானிடராகத்தானே இருக்கின்றீர். அப்படியிருக்க நான் உம்மை நலம் விசாரிக்கவில்லையென்று வருந்துவதில் நியாயம் ஏதும் இல்லையே!

**திருமங்கை ஆழ்வார் :**

கார்மேகம்போன்று எந்தப் பயனையும் என்னிடம் இருந்து எதிர்பார்க்காமல் அருளபுரியும் கருணைக்கடல் அல்லவா? நீர். இருந்தாலும் சொல்லுகின்றேன் கேளும்.

திருவரங்கத்தில் அரங்கனாகக் கோயில் கொண்டுள்ள உமது கோயிலுக்குக் கோபுரமும், மதிளும் கட்டுவதற்கு எவ்வளவு துன்பப்பட்டேன். திருடனாகி வழிப்பறி செய்தும், நாகப்பட்டிணத்திலிருந்து புத்த பொன் சிலையைக் கொண்டு வந்தும் திருப்பணி செய்யவில்லையா? உமது அடியவர்களுக்குத் தினமும் அமுது படைக்கவில்லையா? இவற்றையெல்லாம் மறந்து விட்டீரோ?

தி.வே. : ஆம் நீவிர் செய்த திருத்தொண்டினை யான் மறக்கவில்லை. ஆனால், நீவிர் உமது உழைப்பால் பெற்ற பொருளைக் கொண்டு திருப்பணி செய்யவில்லையே. திருவமுது அடியவர்களுக்குப் படைத்தது உண்மையே. ஆனால் குமுதவல்லியை மணப்பதற்காகத்தானே செய்தீர். நீரே, மனமுவந்து, பயன் நோக்காமல் செய்யவில்லையே.

தி. ஆ. : ஆம் சுவாமி! என் சுய நலத்திற்காகத்தான் செய்தேன். இப்போதுதான் உணருகின்றேன். என்னைப் பெற்ற தாய், தந்தை, மனைவி ஆகியோர்தான் ஆதரவு என்று தவறாக நினைத்து, சம்சாரக் கடலிலே விழுந்து துன்பப்பட்டுக் காலத்தை வீணாகக் கழித்துவிட்டேன். நாயைப் போல் கீழ்மகனாக இருந்துவிட்டேன். நீர்தான் அடியேனுக்கு ஆத்மத் தந்தையென்றும் அலர்மேல்மங்கைதான் ஆத்மத்தாய் என்றும், உமது அடியார்கள்தாம் உறவினர்கள் என்றும் இப்போது தான் உணருகின்றேன். இவ்வாறு அடியேன் செய்த பாபங்களைப் போக்கிக் கொள்ளவேண்டி, உம்மை வணங்கி, உமது திருவடிகளில் சரணமடைய வந்துள்ளேன். எமக்கு அருள் புரிவீராக!

தாயே தந்தை யென்றும் தாரமே
கிளை மக்களென்றும்
நோயே பட்டொ ழிந்தேன் நுனைக்
காண்பதோ ராசையினால்
வேயேய் பூம்பொழில் சூழ் விரையார்
திரு வேங்கடவா!
நாயேன் வந்தடைந்தேன் நல்கி
ஆளென்னைக் கொண்டருளே

தி.வே. : குமுதவல்லியின் மணவாளரே! உலகில் தோன்றிய மக்கள் தாங்கள் செய்யும் பாப புண்ணியங்களுக்கேற்ற பலனை நிச்சயம் அனுபவித்துத்தான் தீரவேண்டுமென்பது நீர் அறியாதது இல்லையே! நீரும் சில பாபங்களைச் செய்துள்ளீரே! அதை நீர் அனுபவிக்கவேண்டாமா?

புலவர் ஏ. பரந்தாமன், M.A., B.Ed.,
சென்னை.

யாரே! நீர் சொல்லுவது முற்றிலும் உண்மையே. மானின் பார்வையுடைய இளம்பெண்களின் கண் மயக்கத்திலே மயங்கிப் பல பாபங்களைச் செய்தேன். அதுவும் நான்கு விதமாக நரக தண்டனையை அடையும் படியான பாபங்களைச் செய்துள்ளேன். அதையும் பிறர் தூண்டுதலின்றி நானே செய்தேன். அப்படிப்பட்ட பாபங்களைச் செய்தது பெரும் தவறு என்பதை இப்போதுதான் உணருகின்றேன். தவற்றை உணர்ந்து, இனி அப்படிப்பட்ட பாபங்களைச் செய்யக்கூடாது என்று உறுதி பூண்டேன். மன்னிக்கவேண்டி



பற்றினேன். என் பாபங்களை போக்கி எமக்கு அருள் புரிவீராக!

மானேய் கண்மடவார் மயக்கிற்பட்டு
மாநிலத்து
நானே நானாவித நரகம்புகும்
பாபஞ்செய்தேன்
தேனேய்பூம்பொழில்சூழ்
திருவேங்கடமாமலை-என்
ஆனாய் வந்தடைந்தேன் அடியேனை
யாட் கொண்டருளே!

தி.வே.: மன்னர் குலத்தில் தோன்றிய ஆழ்வாரே! நீர் மண்ணாசை கொண்டு பல போர்களைச் செய்து பல்லாயிரம் வீரர்களைக் கொன்று குவித்ததை மறந்து விட்டீரா?

தி.ஆ.: திருவேங்கட மாமலை எப்போதும் குளிர்ந்த மேகங்களால் சூழப்பட்டு குளிர்ச்சியாக இருப்பதைப் போல், நீரும் என்றும் கருணையே வடிவாகக் கொண்டவர் அல்லவா? நீர் சொன்னதைப்போல (நற்காரியங்கள்) உடக்கும் உமது அடியவர்க்கும் தொண்டு செய்ய வேண்டும் என்ற நல்ல குறிக்கோள் எதையும் நான் பெற்றிருக்கவில்லை அதற்கு மாறாக மண்ணாசை கொண்டு பல போர்களைச் செய்து பல்லாயிரம் வீரர்களைக் கொன்று கொலைக்காரனானேன். மற்றும் யாசித்து வந்தவரிடம் நன்மை பயக்கும் இனிய வார்த்தைகளைச்சொல்லி உதவி புரியாமல், தீமை தரும் கொடிய சொற்களைச் சொல்லி, அவர்கள் மனம் புண்படும்படிச் செய்தேன். நீங்கள் எடுத்துச் சொல்லும் போதுதான் தவற்றை உணருகின்றேன். அடியவர் குற்றங்களைக் குணமாகக் கொள்ளும் கோவிந்தனே! அடியேன் குற்றங்களை மன்னித்து அருள் புரிவீராக!

கொன்றேன் பல்லுயிரைக்குறிக்கோள்
ஒன்றிலாமையினால்
என்றேனும் இரந்தார்க்கு இனிதாக
வுரைத்தறியேன்



குன்றேய் மேகமதிர் குளிர்மாமலை
வேங்கடவா
அன்றே வந்தடைந்தேன் அடியேனை
யாட்கொண்டருளே!

தி.வே.: கலியரே நீவிர் பல பிறவிகள் எடுத்து வருந்தினீர்! நீர் உய்யவேண்டுமென்பதற்கே மானிடப் பிறவியைத் தந்தேன். இப்பிறப்பைத் தெப்பமாகக் கொண்டு சம்சாரமாகிய கடலைக் கடந்து, எம்மை வந்தடைவீர் என்று நினைத்தேன். ஆனால்..

தி.ஆ.: அணுவளவும் உம்மை விட்டுப் பிரிந்தால் நீர் அடியவர்கள் செய்யும் தவற்றுக்காகத் தண்டித்து விடுவீரே என்று பயந்து உம்மை விட்டுப் பிரியாமல் உமது திருமார்பிலே வாழ்கின்ற அலர் மேல் மங்கை மணவாளரே! நீர் சொன்னதைப் போல் யான் பல பிறவிகள் எடுத்

போல் உம்மை வணங்கினேன் இல்லை. ஜடாயுவைப் போல் உமக்கு உதவினேன் இல்லை. எனவே இப் பிறப்பிலாவது உம்மையடைவதற்குரிய யாதொரு சிறிய தொண்டையும் செய்யாமல், பல துன்பங்களில் சிக்கித் துன்பம் அடைந்தேன். இறுதியாக திருவேங்கடமலையில் உம்மைக் கண்டு வணங்கி, பாபம் நீங்கி, பரமபதம் அடையலாமென்று வந்தேன். எனக்கு அருள்புரிவீராக!

குலந்தா னெத்தனையும் பிறந்தே
இறந்தெய்த் தொழிந்தேன்
நலந்தானொன்றுமிலேன் நல்லதோ
ரறஞ்செய்து மிலேன்
நிலந்தோய் நீள்முகில்சேர் நெறியார்
திருவேங்கடவா!
அலந்தேன் வந்தடைந்தேன்
அடியேனை யாட்கொண்டருளே

தி. வே. : திருவாலி நாடுடைய ஆழ்வாரே! எனக்குச் செய்யும் தொண்டைவிட, என் அடியார்களாகிய பாகவதர்களுக்குச் செய்யும் தொண்டு, தினை அளவாக இருந்தாலும் அதை நான் பனை அளவாகக் கொண்டு அருள்புரிபவன். அப்படி ஏதாகிலும் செய்தீரோ?

தி. ஆ. : திருமகள் கேள்வனே! உலகில் என்னென்ன பாபங்கள் உள்ளனவோ! அவ்வளவு பாபங்களையும் செய்துவிட்டேன். தேனில் மொய்க்கும் ஈக்களைப் போல, அப் பாபங்கள் என்னை வந்தடைந்து துன்புறுத்தின. அதனால் மிகவும் இளைத்துவிட்டேன். அதன் பிறகாவது உமது திருவடிகளை வணங்கி உன் புகழைப் பாடினேனா? என்றால் அதையும் செய்யவில்லை. தவறு செய்த பிள்ளை, துன்பத்தையெல்லாம் அனுபவித்து மனம் நொந்து, தன் தந்தையின் உதவியையும், அன்பையும் எதிர்நோக்கி வருவதைப் போல, அடியேனும் எனது ஆத்மாவிற்குத் தந்தையாகிய உம்மை வந்தடைந்தேன். என் அப்பா! எனக்கு அருள்புரிவீராக!

எப்பாவம் பலவும் இவையே
செய்திளைத் தொழிந்தேன்
துப்பா நின்னடியே தொடர்ந்
தேத்தவும் கிற்கின்றிலேன்
செப்பார் திண்வரைசூழ் திருவேங்கட
மாமலை என்
அப்பா! வந்தடைந்தேன் அடியேனை
ஆட் கொண்டருளே.

தி.வே. : திருமங்கை மன்னரே! நீர் மன்னராக இருந்த போது உமது நாட்டில் ஐம்பெரும் பாபங்கள் ஏதும் நடவாமல் குற்றம் செய்தவரை தண்டித்து நல்லாட்சி நடத்தினீர். ஆனால் உமது உடலில் உள்ள ஐம்பொறிகளை அடக்கி ஆண்டு எம்மிது பக்தி செய்ய இயலாமல் போய்விட்டீரே!

தி. ஆ. : திருவேங்கட மலைக்கு அதிபதியான எனது அண்ணலே! மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய ஐந்து பூதங்களும் ஐந்து பொறிகளால் ஆகியது இவ்வுடல். புண்கள் நிறைந்த இவ்வுடலில் அகப்பட்டுக் கொண்ட யான் சொல்ல முடியாத துன்பங்களை அநுபவித்தேன். எனவே இன்னும் ஒரு மறுபிறவி எடுக்கப்பயந்துகொண்டு உமது திருவடிகளில் சரணாகதி பண்ணினேன். அடியேனுக்கு அருள் புரிவீராக!

மண்ணாய் நீரெரிகால் மஞ்சுலாவு
மாகாசமுமாம்
புண்ணா ராக்கைதன்னுள் புலம்பித்
தளர்ந் தெய்த்தொழிந்தேன்
விண்ணார் நீள்சிகர விரையார்
திருவேங்கடவா!
அண்ணா! வந்தடைந்தேன்
அடியேனை ஆட்கொண்டருளே!

தி. வே. ; திருமங்கைஆழ்வாரே! மக்களில் இளம் பருவத்தில் தரும நெறியைத் தெரிந்து கொள்ள முடியாமையால் தீமைகள் செய்யலாம். ஆனால் வயது முதிர்ந்த நிலையில் தருமநெறியைப் பின்பற்றி நடக்கவேண்டும் அல்லவா? ஆனால்

அப்படியிருக்க என் அருள் வேண்டுவது எப்படிப் பொருந்தும்?

தி. ஆ. : ஸ்ரீநிவாசப்பெருமானே, நீர் கேட்பது முற்றிலும் பொருத்தமே. அடியேன் சிறியவனாக இருந்த போது அறியாமையால் பல தீய செயல்களைச் செய்து விட்டேன். இவை தெரியாமல் செய்த குற்றம். ஆனால் பெரியவனான போது உடல் இன்பத்தையே பெரிதும் விரும்பி, தீறான வழியில் பல பெண்களுடன் கூடி காலத்தை வீணே கழித்துவிட்டேன் என அழகும் பெருமையும் வலிமையும் கெட்டு ஒழிந்தன. இவை தெரிந்தே செய்த குற்றங்கள். நரக தண்டனைக்குப் பயந்து வந்துள்ளேன். எப்போது உன் கருணை மிகு பார்வை என்மீது பட்டதால தவற்றை உணர்ந்து உம்மை தரிசித்து உய்ய வந்துள்ளேன். நீ பாபங்களைப் போக்குபவன் என்பதால தானே 'ஹரி' என்ற பெயரைப் பெற்றாய். உன் திருநாமத்தின் பெருமைக்கு பங்கம் வரமல் என்னைக் காப்பாற்றுவாயாக!

தெரியேன பாலகனாய்ப் பலதீமைகள்
செய்துவிட்டேன
பெரியோனாயினபின பிறர்க்கேயு-
ழைத் தேழையானேன்,
கரிசேர் பூம்பொழில்சூழ் கனமாலை
வேங்கடவா!
அரியே! வந்தடைந்தேன் அடியேனை
யாட் கொண்டருளே

தி. வே. : திருமங்கை மன்னரே! நீர் செய்த தீமைகளால் இன்னும் பல பிறவிகள் எடுக்க வேண்டியுள்ளதே. அப்படியிருக்க நீர் இப்பிறவியிலே பரமபதம் கேட்டால் எப்படிக்கிடைக்கும்?

தி.ஆ. : திருவேங்கடமுடையானே! அடியேன் செய்த தீமைகளால் பல பிறவிகள் எடுக்க வேண்டியது தகும். அதை உணர்ந்து தானே உம்மிடம் சரணாகதி பண்ணிசிக்கும் பேற்றினைப் பெற்றேன். உனது தரிசனத்தால் அடியேன் பாபங்கள் பகலவனைக் கண்ட பனி போல் போகுமல்லவா? உம்மைச் சரணமடைந்த காகாசூரன், சுக்ரீவன், விபீட்சணன் ஆகியோரைக் காத்து இரட்சிக்கவில்லையா? எனவே அடியேன் தீவினைகளைப் போக்கி இரட்சிக்கப்பட வேண்டியவனே! தயங்காமல் அருள்புரிவீராக!

நோற்றேன் பல்பிறவி நுனைக்
காண்பதோ ராசையினால்
ஏற்றேன் இப்பிறப்பே இடருற்றனன்
எம்பெருமான்
கோறறேன் பாய்ந்தொழுகும்
குளிர்சோலைசூழ் வேங்கடவா!
ஆற்றேன் வந்தடைந்தேன்
அடியேனை யாட்கொண்டருளே

தி.வே. ஆழ்வாரே! நீர் வேண்டுவது நியாயமானதே. உமது பாபங்கள் மன்னிக்கக் கூடியதே. நீர் மிகவும் வருத்தப்பட்டு, துன்பங்களை அனுபவித்து வந்துள்ளீர். உமது ஆத்மதந்தை என்றநிலையிலே உமது தீமைகளுக்குத் தண்டனை அளிக்க வேண்டுமென்றுதான் என் உள்ளம் கருதுகின்றதே தவிர, மன்னித்து அருள் புரியவேண்டுமென்று கருதவில்லையே. தண்டனையை அனுபவித்து பின்னர் வாரும், அருள்புரிகின்றேன்.

தி.ஆ. : (தனக்குள்) எம்பெருமான் உள்ளத்தைக் கனிய வைக்க நமது ஆத்மத்தாயாகிய அலர்மேல் மங்கையாரால்தான் முடியும். அவர் புருஷகாரம் (பரிந்துரை) செய்வார். அவரைச் சென்று வேண்டுவோம். அகலகில்லேன் என்று உறையும் அலர்மேல் மங்கையாரே! இதுகாறும் யான் திருவேங்கடமுடையானுடன் வேண்டிக்கொண்டதை நீர் கேட்கவில்லையா? அடியேன் எவ்வளவோ வேண்டியும் அவர் உள்ளம் கனியவில்லையே? நீராகிலும் பரிந்துரை செய்து இரட்சிக்க செய்யமாட்டீரா?

வாரே! நீர் படும் துயரங்களை யான் நன்கு அறிவேன். யான என்ன செய்ய! நீர் என்னை மறந்தீர். எனது பரிந்துரையை மறந்தீர். எனது கருணையை நினைக்க மறந்தீர். உம் போன்றவரைக் கோபித்துத் தண்டித்து விடுவாரே என்று பயந்து தானே நான் ஒருகணமும் அவரைப் பிரிய இயலாமல் மார்பிலே வாழ்ந்து கொண்டிருக்கின்றேன். நான் உடன இல்லாமையினால்தான் மாரீசன், இராவணன் போன்றவர் மாண்டனர். நான் உடன் இருந்ததால்தானே காக்காசுரன் காப்பாறறப்பட்டான். கவலைப்படாதீர்! யான பரிந்துரைத்து உமக்கு அருள்புரியச் செய்கின்றேன். சற்றே பொறும்.

(அலர்மேல் மங்கை திருவேங்கடவனை நோக்கி)

அ.ம. : சுவாமி! தேவரீரை அடியேன் நமஸ்கரிக்கின்றேன். நீண்ட நேரமாக யாரிடம் வாக்குவாதம செய்து கொண்டிருந்தீர்.

தி.வே. : அதுவா! நாம் அன்றொரு நாள் கல்யாணக் கோலத்தில் சென்று திருமந்திர உபதேசம் செய்தோமே! அந்த திருமங்கை ஆழ்வார் தான். அவர் செய்த தவறுகளை உணர்ந்து, வருந்தி, தரிசித்து, சரணாகதி செய்து தன்னை ரட்சிக்கவேண்டுமென்கிறார். நான் அவற்றுக்குரிய தண்டனையை அனுபவித்தால்நான் ரக்ஷிப்பேன் என்றேன்.

அ.ம. : சுவாமி! தேவரீர் அடியவருடைய குற்றங்களையே குணமாகக்கொள்ளக்கூடியவர். கருணாகரன், ஆபத்பாந்தவன் என்றெல்லாம் பேரைப் பெற்றவர். அதுவும் ஆழ்வார் தவறை உணர்ந்து, மனம் வருந்தி, துன்பப்பட்டு, உமது திருவேங்கடமலை வந்தடைந்து, உம்மை தரிசித்து, சரணாகதி பண்ணியுள்ளார். இப்படியிருக்க இன்னும்

(32-ம் பக்கம் பார்க்க)

# மகேஸ்வர வடிவங்கள்

சிந்து சமவெளி நாகரிகத்தின் மூலம், மகேஸ்வரன் வழிபாடு மிகத் தொன்மையானது என்று நமக்குத் தெரியவருகின்றது. அங்குக் கிடைக்கப்பெற்ற நாணயங்கள், பாத்திரங்கள், முத்திரைகள் முதலானவற்றில் சிவனின் எண்ணற்றத் திருக்கோலங்கள் காணப்படுகின்றன.

சிவபெருமானின் பராக்கிரமத்தை விளக்குவது "சிவபராக்கிரமம்" என்னும் நூலாகும். இப்பராக்கிரமத்தில் முக்கியமானவையாக 25 ரூபங்களை மட்டும் சிறப்பாகக் கூறலாம். அம்மூர்த்தங்கள் பின்வருமாறு பேசப்படுகின்றன.

1. சோமாஸ்கந்தர், 2. நடராஜர் 3. ரிஷபாருடர், 4. கல்யாண சுந்தரர், 5. சந்திரசேகரர், 6. பிக்ஷாடனர், 7. காமாரி, 8. காலாரி 9. சலந்தராரி, 10. திரிபுராரி, 11. கஜாரி, 12. விரபத்ரர், 13. தட்சிணாமூர்த்தி, 14. கிராத மூர்த்தி, 15. நீலகண்டர், 16. கங்காளர், 17. சக்ரதானர், 18. கஜாந்திகர், 19. சண்டேச அனுக்ரகர், 20. ஏகபாதர், 21. இலிங்கோத்பவர், 22. சுகாசனர், 23. உமாமகேசர், 24. ஹரிஹரர், 25. அர்த்தநாரிஸ்வரர் முதலியனவாகும்.

இத்திருவுருவங்கள் சதாசிவ மூர்த்தியின் ஐந்து முகம் மூலம் வெளிப்பட்டன என்று ஆகமங்கள் கூறுகின்றன. ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்யோ ஜாதம் என்பவையே சதாசிவமூர்த்தியின் ஐந்து முகங்களாகும்.

1. சோமாஸ்கந்தமூர்த்தி

சத்து, சித்து, ஆனந்தம் என்ற நிலையினை உணர்த்த வந்த உருவம் ஆகும். சிவன் சத்தாகவும் (நிலைத்தது), சித்து (அறிவு) முருகன் நடுவிலும், ஆனந்தம் (மகிழ்ச்சி) அம்மைக்கும் பொருந்துவதாகும். இத் திருவுருவம் ஈசானமுகத்தில் தோன்றியது. சிவாலயங்களின் பிரதான மூர்த்தி ஆகும். திருவாரூர் தலமே சோமாஸ்கந்தமூர்த்திக்கு பிரதானத் தலமாகும்.

2. நடராஜமூர்த்தி

பஞ்ச கிருத்தியங்களையும், பஞ்சாட்சரத்தையும் விளக்க வந்த திருவுருவம் ஆகும். நாட்டியத்தின் மூலவர் இவரே ஆவர். இவரது ஆனந்த தாண்டவமே (நடராஜர் திருவுருவம்) எல்லா சிவாலயங்களிலும் இருப்பது ஆகும். இத் திருவுருவம் ஈசான முகத்திலிருந்து வெளிப்பட்டனவாகும். சிதம்பரம் எனும் தலமே நடராஜரது சிறப்புத்தலமாகும். இதனை பொன்னம்பலம் என்பர். இது ஐந்து சபைகளில் ஒன்று ஆகும்.

3. ரிஷபாரூடமூர்த்தி

தருமதேவதையான காளையில் அமர்ந்தும் காட்சி தருவார். ஈசானத்தில் தோன்றியவர். மதுரை இதற்குச் சிறப்புத் தலமாகும்.

4. சந்திரசேகர மூர்த்தி

மூன்றாம் பிறைச்சந்திரனை அணிந்து சந்திரனின் சாபத்தை நீக்கி அருளிய வடிவமாகும். பெரும்பாலும் ஆலயங்களில் நின்ற நிலையில் அம்மையுடன் காணப்படுவார். (கேவல சந்திரசேகரர் உமை இல்லாத தனி மூர்த்தியாகும்) திருப்புகலூர் எனும் தலம் சந்திரசேகரரின் பிரசித்திபெற்ற தலமாகும். இதுவும் ஈசானத்திலிருந்து வந்த திருவுருவாகும்.

5. கல்யாணசுந்தர மூர்த்தி

இமவானின் மகளான பார்வதியை மணந்து கொண்ட திருக்கோலமாகும். திருவீழிமிழலை, திருமணஞ்சேரி எனும் தலங்கள் கல்யாண கோலத்திற்குச் சிறப்புடைய தலமாகும். இத்திருவுரு ஈசான முகத்திலிருந்து வெளிப்பட்டனவாகும்.

6. பிக்ஷாடனமூர்த்தி

தாருகாவனத்து ரிஷிகளுக்கு உண்மைப் பொருளை உணர்த்துதல் வேண்டி தாம் திகம்பரராய் பிரம கபாலம் கொண்டு பலி ஏற்ற திருக்கோலமாகும். அதுசமயம் திருமால் மோகினி வடிவத்தில் காட்சி தந்தார். இத்திருவுருவம் தத்புருஷத்தில் வெளிப்பட்டது என்பர்.

7. காமாரி மூர்த்தி

இத்திருவுருவமும் தத்புருஷ முகத்திலிருந்து வெளிப்பட்டது ஆகும். உமையைப் பிரிந்து, சனகாதி முனிவர்களுக்கு உபதேசம் செய்து நிஷ்டையில் இருக்கும் சமயம் இப்பெருமான் மேல் மன்மதன் மலர் அம்புகளை எய்தமையால் மன்மதனை விழித்து எரித்தார். இம்மூர்த்தியின் சிறப்பான தலம் திருக்குறுக்கை வீரட்டம் ஆகும்.

---

திரு. எஸ். நாராயணசுவாமி,
எம்.ஏ., பி.எட்.
திருவிடைமருதூர்.

---

8. காலாரி மூர்த்தி
(காலசம்கார மூர்த்தி)

மார்க்கண்டேயர் என்றும் 16 வயது உடையவர் என்பதனையும், சிவ பூசையினால் எமனையும் வெல்லலாம் என்பதற்கும் சான்றாக லிங்கத்திலிருந்து வெளிப்பட்டு எமனை சம்



லவகுச லிங்கம் - ஆவனி - கர்நாடா மாநிலம்

ஹரித்த திருக்கோலமாகும். தத புருஷ முகத்தில் தோன்றிய இத்திரு வுருவத்தை திருக்கடையூர் எனும் தலத்தில் காணலாம்.

9. சலந்தராரி மூர்த்தி

சலநதரன் என்ற அசுரன் சிவனாரது வியர்வையிலிருந்து தோன்றியவன். அவன் தேவர்களைத் துன்புறுத்தினான். ஒரு நாள் சிவனின் திருப்பாதத்தில் கீறிய சக்கரத்தை எடுக்க அவன் முயலும்போது அதுவே அவனைக் கொன்றது. இச்செயலால் பெருமான் சலந்தராரி என போற்றித் துதிக்கப்பட்டார். தத்புருஷ முகத்தில் தோன்றிய இவரை திருவாரூருக்கு அருகில் உள்ள விற்குடி எனும் தலத்தில் காணுதல் சிறப்புடையது ஆகும்.

10. திரிபுராரிமூர்த்தி (திரிபுராந்தகர்)

மூன்று கோட்டைகளை நிறுவி ஆட்சி செய்த மூன்று அசுரர்களை சிவபெருமான், நான்கு வேதங்களும் சக்கரங்களாக அமைந்த தேரில் ஏறிச சென்று, திரிபுராதியர்களைத் தன் சிரிப்பால் எரித்த திருக்கோலமாகும். திருவதிகை எனும் தலத்தின் கோயில் தேர் வடிவமாகவும் அத்தேர்வடிவத்தில் தானுமிருந்து அருளுகின்றார். இத்திருவுருவமும் தத்புருஷ ரூபத்தில் தோன்றியதாகும்.

11. கஜாரிமூர்த்தி (கஜசம்ஹாரமூர்த்தி)

இத்திருவுருவம் அகோர முகத்திலிருந்து வெளிப்பட்டது ஆகும். தாருகாவனத்து ரிஷிகள் சிவபிரானை அழிக்க யாகத்திலிருந்து உண்டாக்கிய யானையினை, இப்பெருமான் கிழித்து அழித்து அதனையே ஆடையாகக் கொண்டமையினால் கஜாரி எனப் போற்றப்பட்டார். யானையினை உரித்து போர்த்திய தலமாகிய "வழுவூரில்" கோயில் கொண்டுள்ளார்.

12. வீரபத்ரர்

அகோர முகத்தில் தோன்றிய இத்திருவுருவம் தக்ஷனது அகந்தையை அழித்த திருக்கோலமாகும். திருப்பறியனூர் மற்றும் திருவெண்காட்டில் உள்ள திருக்கோயில்களில் கண்டு மகிழலாம.

13. தட்சிணாமூர்த்தி

கல்லால மரத்தின் கீழ் ஞானத்தினை சனகாதி முனிவர்களுக்கு உபதேசிக்கும் திருக்கோலம். இவரை தென்முகக்கடவுள் என்றும் கூறுவர். சிவாலயங்களின் தெற்கு கோஷ்டத்தில் வீற்றிருந்தருளுவார். மேலும் இவரை திருக்கோயில்களில் தென் திசையில் காணலாம். இவரது யோக நிலையினை 28 என விளக்குவர். ஆலங்குடி, மயிலாடுதுறை, திருப்பூந்துருத்தி முதலான தலங்களில் காணலாம். வியாழககிழமையில் வழிபடுவது நன்று. இவரை குரு என்றும் போற்றுவர்.

14. கிராதமூர்த்தி

அகோரமுகத்திலிருந்து தோன்றிய திருவுருவம் கிராத மூர்த்தியாகும். கிராத ரூபம் என்ற வேடன் ரூபமாகும். அர்ச்சுனன பாசுபதாஸ்திரம் பெற தவம் செய்த போது பெருமானானவர் வேடுவ ரூபத்தோடு அமர் புரிந்த கோலமாகும். கிராதமூர்த்தி திருக்கோலம்கண்டுவழிபட சிதம்பரத்திற்கு மேறகே உள்ள திருவேட்களம் திருக்கோயில்களுக்குச் செல்லலாம்.

15. நீலகண்ட மூர்த்தி

திருப்பாற்கடலைக் கடைந்தபோது உயர்ந்த பொருள்களை எல்லாம் அவரவர் விருப்பப்படி ஏற்றுக்கொண்டனர். அமுதம் வருவதற்கு முன்னர் விஷம் வந்து எல்லோரையும் அழிக்க முற்பட்டது. எல்லோரும் அஞ்சி ஓடினர். சிவபிரானார் கொடிய விஷத்தைத் தாம் உண்டும் விஷம் தமது கண்டத்திலே இருத்தியும் காட்சி கொடுத்தார். இத்திருவுருவம் அகோர முகத்தில் தோன்றியது. சுருட்டப்பள்ளி என்னும் தலத்தில் விஷம் உண்ட களைப்பால் சிவபெருமான் சயனத் திருக்கோலமாகக் காட்சி தருகின்றார்.

16. கங்காளமூர்த்தி

வாமதேவத்தில் தோன்றிய இத்திருவுருவத்தினை திருச்செங்காட்டங்குடி திருத்தலத்தில் காணலாம்.

17. சக்ரதானர்

திருமாலானவர் ஸுதர்சனத்தைப் (சக்கரம்) பெற ஆயிரம் மலர் கொண்டு அர்சித்து வருங்கால் ஒரு மலர் குறைய உடனே தன் கண்ணையே மலராய் எடுத்து அருச்சித்தமையால் சிவபெருமான் மகிழ்வு கொண்டு சக்கரம் தந்தருளினார். வாமதேவத்தில் எழுந்தருளிய இத் திருவுருவத்தினைத் துதித்தால் விக்னங்கள் விலகும்.

18. கஜாந்திகர்

வாமதேவத்தில் வெளிப்பட்ட இத் திருவுருவம் ஐராவதமாகிய யானைக்கு அநுக்கிரகம் செய்யத் திருவுருவம் கொண்டது ஆகும்.



ஸ்ரீ முல்லைவனநாதர் -திருக்கருகாவூர்

19. சண்டேச அனுக்கிரகர்

மணலினால் பிரதிட்டை செய்த லிங்கத்திற்கு, பசுவின் பாலினை அபிஷேகித்த சண்டேசருக்கு சண்டேச பதத்தினைச் சிவபெருமான் அருளிச் செய்த இத்திருவுருவமாகும். இது வாமதேவ முகத்தில் தோன்றிய தாகும்.

20. ஏகபாதமூர்த்தி

இத் திருவுருவம் வாமதேவத்தில் தோன்றியதாகும். அண்டசராசரங்கள் அனைத்தும் அழிந்து அவை யாவும் ஒடுங்க சிவபெருமானானவர் ஏக பாதத்துடன் விளங்கிய திருக் கோலமாகும். இவரது உடலின் ஒரு பக்கம் பிரமனும், மறுபக்கம் திருமாலும் தோன்றியிருத்தலை சிற்பத்தில் காணலாம். இவரை வழிபட ஞானம் கைகூடும்.

21. இலிங்கோத்பவர்

இலிங்கோத்பவ மூர்த்தியின் திருவுருவத்தினை சிவன் கோயிலின் மேற்கு கோஷ்டத்தில் காணலாம். பிரமனுக்கும், திருமாலுக்கும் உண்மை அறிவிக்க ஜோதி ஸ்வரூபமாகத் தோன்றின உருவமே இலிங்கோத்பவமூர்த்தியாகும். திருவண்ணாமலை எனும் திருத்தலத்தில் இந்நிகழ்ச்சி நடந்ததாகும். சத்யோ ஜாத முகத்தில் தோன்றியதாகும்.

22. உமாமகேசர்

சிவனும், அம்பிகையும் அமர்ந்த திருக்கோலமாகவும் அல்லது ஆலிங்கன சந்திரசேகரராகவும் காணும் காட்சியே உமாமகேசமூர்த்தமாகும். சத்யோஜாதத்தில் தோன்றின இம் மூர்த்தி சகல காரியங்களையும் நிகழ்த்திவைக்கின்ற அம்பிகையோடு தாம் என்றென்றும் அகலாத ஆனந்த ஸ்வரூபமாகத் திகழும் திருக்கோல மாகும்.

23. சுகாசனர்

வேத சிவாகமங்களை உமாதேவியார்க்கு உபதேசிக்க வேண்டியும், சத்யோஜாத முகத்தில் தோன்றி சுகாசனம் கொண்டு அருளுபவர். பெருமானது வலது ஹஸ்தம் உபதேச சிரமத்திலும் இடது ஹஸ்தம் அம்பிகையின் மீதும் காணப்படும்.

24. ஹரிஹரமூர்த்தி

அம்பிகையின் வடிவம் பெற்ற திருமாலை, பெருமானானவர் தனது இடப்பாகம் கொண்டு காட்டியவர். சங்கரநாராயணர் கோயிலில் உமாதேவியார் தவம் கொண்டு ஹரனையும், ஹரியையும் ஒருசேரக் கண்டு ஆனந்தம் கொண்டாள். இத்திருக் கோலமும் சத்யோஜாதத்தில் தோன்றியதாகும்.

25. அர்த்தநாரி

சத்யோஜாதத்தில் வெளிப்பட்ட இத்திருவுருவம் வலப்பாகம் சிவனாகவும், இடப்பாகம் பார்வதியாகவும் அமைந்தனவாகும். எல்லா சிவாலயங்களின் கருப்பக்கிருக மேற்கு கோஷ்ட மாடத்தில் இத்திருவுருவத்தைக் காணலாம். திருச்செங்கோடு எனும் தலம் இதற்குச் சிறப்புடைய தலமாகும். உலகத்து இன்பங்களைப் பெற இவரைத் தொழுதால் பெறலாம்.



# அமலனாதி பிரான்

திரு. வ. ஜோதி, எம் ஏ.
புதுப்பேட்டை

கோபாலன் குழல் ஊதிக் கோக்களையும் கோபியரையும் மகிழ்வித்ததுபோல், அக்கோவிந்தனைத் தமது யாழிசையின் நாதத்தால் கீதம்பாடி மகிழ்வித்தவர் திருப்பாணாழ்வார். இவ்வாழ்வார் இயற்றியது அமலனாதிபிரான் என்னும் திருப்பாசுரம். இது பத்துப் பாசுரங்களைக் கொண்டது.

நாரதாதிகளும், தொண்டரடிப் பொடியாழ்வாரும் திருப்பாணாழ்வாரும் திருவரங்கத்திலே ஊன்றி இருப்பார்கள். திருப்பாணாழ்வார் தாம் கண்ட பெரிய பெருமானின் திருவடி முதல் திருமுடிவரை பிரகாசிக்கின்ற அழகை எல்லாம் 'அமலனாதி பிரான்' என்று தொடங்கிக் 'கொண்டல் வண்ணனை' என்ற பாசுரம் வரை அனுபவித்துப்பாடி, அப்பெரிய பெருமாளின் திருவடி வாரத்தில் நின்றருளினார்.

பெரியாழ்வாரால் இயற்றப்பட்ட 'திருப்பல்லாண்டு', மதுரகவியாழ்வாரால் இயற்றப்பட்ட, 'கண்ணி நுண் சிறுத்தாம்பு', திருப்பாணாழ்வாரால் இயற்றப்பெற்ற 'அமலனாதி பிரான்',-என்ற இம்மூன்று பாசுரங்களுக்கும் ஒரு தனிச் சிறப்பு உண்டு. இப்பிரபந்தங்கள் அனைத்தும் துவங்கும் பெயரால் வழங்கும் பதிகங்கள். இம்மூன்றில் 'அமலனாதி பிரான்' மிகவும் சிறப்புடையது.

'கொண்டல் வண்ணனைக் கோவல
னாய் வெணணெய்
உண்டவாயின் என்உள்ளம் கவர்ந்
தானைக்
அண்டாகோன் அணியரங்கன என்
அமுதினைக்
கண்டகண்கள் மற்றொன்றினைக்
காணாவே

(அமல-10)



திருவரங்கத்துச் செல்வராகிய பெரிய பெருமாளை திருவடி முதல் திருமுடி வரை நேரே அனுபவித்தவர் திருப்பாணாழ்வார். அர்ச்சையில் கண்ட அவ்வனுபவத்தைத் தம்பத்துப் பாசுரங்களில் பாடியுள்ளார். அதில் மிக்க சிறப்புடையது இப்பத்தாம் பாசுரம்.

'நீருண்ட மேகம் போன்ற திருநிறத்தையுடையவனாய், ஆயர் குலத்தில் தோன்றி வெண்ணெய் அமுது செய்த திருப்பவள வாயினை உடையவனாய், என் மனதைக் கவர்ந்தவனாய், ஆயர்களுக்கெல்லாம் தலைவனாய், அழகிய கோயிலிலே வந்து கண் வளருகின்றவனாய், எனக்கு அமுதம் போல பரம யோக்யனாய் அமைந்த பெருமானைக் காணப் பெற்றேன். இனி அப்பெருமானைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காண மாட்டா' என்கிறார்.

இப்பாசுரத்தை இவர் மனம் உருகிப்பாடஎம்பெருமான் அங்கீகரித்தருள திருப்பாணாழ்வார் அனைவரும் காணப் பெரிய பெருமாள் திருவடியிற் சேர்ந்தார். பெருமான் திருவடியில் இரண்டறக் கலந்து நின்று, யாழிசைப் பாடிப் பரமனைப் பரவசப்படுத்தி அவன் அவயங்களின் அழகில் ஈடுபட்டு, மற்ற எப்பெருமாளிடமும் கவனம் செலுத்தாத உத்தம பத்தரைப் 'பாண்பெருமாள்' என்று இவ்வுலகம் போற்றுகின்றது.

பிரகலாதனுக்கு உதவுவதற்காக ஓடிவந்த கால்களையும், சிவனுக்கு பிச்சையிட்ட கைகளையும், உலகம் உண்ட வாயையும், கழுத்தையும், பிராட்டி வாழ்கின்ற மார்பையும், தாமரைத் திருவடிகளையும் கண்டதாகக் கூறும் திருப்பாணாழ்வார் அழகிய மணவாளனின் நீண்ட நீல

நிற ஒளி படைத்த கருணைக் கண்ணழகில் ஈடுபட்டுத் தன்னை மறந்து அனுபவித்துப் பாடிய பாசுரம் 'அமலனாதிபிரான்' ஆகும். இதனை,

'காட்டவே கண்ட பாதம் கமலம்
நல்லாடை உந்தி
தேட்டரு முதர பந்தம் திருமார்பு
கண்டம் செவ்வாய்
வாட்டமில் கண்களா மேனி முனியே
றித்தனி புகுந்து
பாட்டினால் கண்டு வாழும் பாணர்
தாள்பரவி னோமே'

என்ற திருமலை நம்பிகள் அருளிச் செய்த தனியன் மூலம் அறிய முடிகின்றது. இவர் பாசுரங்கள் எல்லாப் பொருள்களையும் தன்னுள் கொண்டிருக்கும் தன்மையைக் கொண்டன.

'அமலனாதிபிரான்' என்ற திருப்பாசுரம் பெரிய பெருமாளின் பரத்துவத்தையும், தம்மை அடியார்களுக்கு அடியவனாக்கிய பேருபகாரத்தையும், அப்பெருமானின் திருவடிகள் தம் கண்களுக்கு விருந்தானமையையும் கூறுகின்றது.

மற்ற எல்லா பாசுரங்களும் பகவானின் கல்யாண குணங்களைப் பேசும். பல இடங்களில் பாகவத சேஷத்துவம் பேசும். அமலனாதிபிரான் பாசுரமோ திருமந்திரத்தின் சாரம். அகர, உகர, மகரங்களிலே முதல் மூன்று பாசுரங்களைத் தொடங்குவதன் மூலம், இப்பிரபந்தம் ப்ரணவ ஸாரமாயிருப்பது என்று ஆழ்வாரே உணர்த்தி அருளினார்.

பரத்துவத்திலே நோக்கமுடைய நம்மாழ்வார் 'உயர்வற உயர்நலம் உடையவன் - அமரர்கள் அதிபதி' - என்று அருளியதை திருப்பாணாழ்வார் 'அமலன்' என்று குறிப்பிட்டுக் காட்டுகின்றார். ஞானத்துவம், அறத் தத்துவம், அமலத்துவம் போன்ற குணங்கள் நிருபனவாகும். அவற்றுள் இவர் அமலத்துவம் என்ற குணத்தால் பரத்துவத்தைக் குறிப்பிடுகின்றார்.



ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வரசுவாமி கோயில்
ஸ்ரீநிவாசா மங்காபுரம் (திருப்பதிக்கருகே)

மலம் என்றால் குற்றம் என்பது பொருள். அமலன் என்றால் குற்றங்களுக்கு எதிர் மாறானவன் என்பது பொருள். அதாவது எல்லா நற்குணங்களையும் உடையவன் என்பது பொருள். எனவே அமலன் என்ற சொல்லால் தம் பாசுரத்தைத் தொடங்குகின்றார்.

பிரம்மன் முதலிய தேவர்களாலும் அறிதற்கு அரிய பிரகிருதிகளுக்கெல்லாம் சிறந்த காரணனாக இருப்பவன் பெருமான் என்று நம்மாழ்வார் தம் திருவாய்மொழியில் பாடியருளினார்.

'சுரர் அறிவு அருநிலை விண்முதல்
முழுவதும்
வரன்முதலாய் அவை முழுதுண்ட
பரபரன்
புரம் ஒருமூன்று எரித்த அமரர்க்கும்
அறிவியந்து
அரன்அயன் எனஉலகம் அழித்து
அமைத்து உளனே,'
(திருவாய்மொழி 1-8 (2682))

இக்கருத்தினை உள்ளடக்கி இப்பெருமானை, "ஆதி" என்று குறிப்பிடுகின்றார். எனவே நீதற விளங்கிய திகிரியோனாகிய வேத முதல்வனாம் பெருமானை 'அமலனாதி பிரான்' என்ற சொற்றொடரால் அழைக்கின்றார். பிரான் என்ற சொல்லிற்கு 'உயிர் போன்றவன்' 'தலைவன்' என்பது பொருள். எனவே பெருமானை 'அமலனாதி பிரான்' என்று விளித்தே தொடங்குகின்றார்.

இவ்அமலனாதிபிரான் பல மந்திரார்த்தங்களை உள்ளடக்கியது. இப்பாசுரத்தின் முதல் பதத்தில் முதல் எழுத்தாய் 'அகாரம்' வந்துள்ளது. அந்த 'அகாரம்' நாராயண பதத்தைப் பிரதிபலிப்பது. அதனால் பரசொருபம் தேறும். அந்த அகாரத்தில் நான்காம் வேற்றுமை புணர்ந்து கெட்டது. அதனால் ஆத்மாக்கள் யாவும் அடிமை என்று தேறும். மேலும் அவ்வடிமை பகவானுக்கு மட்டுமின்றி அவனடியாரளவும் செல்லும். இக்கருத்தின் அடிப்படையில் திருப்பாணாழ்வார்

தினான் என்கிறார்.

ப்ரமாண சாரமான பிரணவத்தில் அடங்கியுள்ள 'அகார உகார மகாரங்களிலே அவர்தன் முதல் பாசுரங்களைத் தொடங்குவதன் மூலம் இப்பிரபந்தம் ப்ரணவ ஸாரமாயிருப்பது' என்று அவரே உணர்த்தினார். ப்ரமேய ஸாரம் எம்பெருமானுடைய திருக்கமலப் பாதப் பாதுகையே என்பதை ஐந்து ஆறு ஏழாவதான நடுப் பாசுரங்களின் முதல் எழுத்துக்களால் உணர்த்தினார். இவ்வண்ணமாக எல்லாப் பொருள்களையும் தன்னிடத்துக் கொண்டிருப்பது இத் திவ்யப் பிரபந்தம்.

திருப்பாணாழ்வார், சத்துருக்கன ஆழ்வார், ஆண்டாள் மூவரும் வைணவத் தத்துவத்தைக் கடைப்பிடித்தவர்கள் ஆவார். பாணர் என்ற வகுப்பிலே தோன்றி பகவானை இசையால் மயக்கியவர்' உணர்வு நிலையிலேயே நின்றவர். உணர்வு எனில் என்ன? திருமகள் கேள்வன் ஒருவனையே நோக்கும் நோக்கே உண்மையான உணர்வு. அந்நிலையிலேயே நின்று தம் பாசுரத்தைப் பாடுகின்றார்.

'அமலனாதிபிரான் அடியார்க்கு
என்னை ஆட்படுத்த
விமலன் விண்ணவர்கோன் விரை
யார் பொழில் வேங்கடவன்
நிமலன் நின்மலன் நீதிவானவன்
நீள்மதில் அரங்கத்து அம்மான்திருக்
கமலபாதம் வந்துஎன் கண்ணினுள்
ளன ஒக்கின்றதே!
(அமல-1)

குற்றங்களுக்கெல்லாம் எதிரானவனும், உலகக் காரணனும் உபகாரகனும், தன் அடியார்களுக்கு என்னை ஆட்படுத்திய விமலனும், நித்திய சூரிகளுக்குத் தலைவனாய் மணம் கமழும் சோலைகள் நிறைந்த திருவேங்கட மலையில் நின்ற திருக்கோலமாய் காட்சிதரும் நிமலனும், நின்மலனும், உடைமைக்கு உடையவன் என்ற மதில்களால் சூழப் பெற்ற திருவரங்கத்தில் பள்ளி கொண்டுள்ள அரங்கனுமாகிய எம்பெருமானின் திருவடித் தாமரைகள், தாமே வந்து என் கண்களுக்கு விருந்தாயின.

திருமலையில் எழில்கொள் சோதியாகக் காட்சி அளிப்பவன் பரமபத நாதன். பெரிய பெருமாளைத் திருவடி முதல் அவனுடைய அழகுகளில் திளைப்பவர், முற்படத் திருவேங்கடமுடையானைக் காணுகின்றார். உலகத்தைக் காப்பதற்காகப் பரம பதத்தில் இருந்து முதலில் பொற்காலிட்ட இடம் திருமலை. ஆதலால் அத்திருவேங்கடமுடையானே அரங்கத்தம்மான் என்கிறார்.

தாய் மார்பில் குழந்தை வாய் வைக்குமாப்போல் திருப்பாணாழ்வாரின் திருக்கண்கள் பெரிய பெருமாளின் திருவடிகளில் ஒன்றிவிட்டன. அந்தத் திருப்பாதங்களும் தாமே முற்பட்டு ஆழ்வார்க்கு விருந்தாயிற்று. அதனை எண்ணி மிக அருமையாக 'திருக்கமல பாதம் வந்துஎன் கண்ணினுள்ளான'-என்று பாடுகின்றார்.

திருப்பாணாழ்வார் உறையூரிலே கார்த்திகை மாதத்து உரோகினி நட்சத்திரத்திலே நெற்பயிர் கழனியில் கண்டெடுக்கப்பட்டு, பாண் குலத்தாரால் வளர்க்கப்பட்டு வந்தார். இவர் திருமாலின் ஸ்ரீவத்சத்தின் அமிசம் ஆவார்.

இவர் பாண் குலத்தினரால் கண்டெடுக்கப்பட்டு வளர்க்கப்பட்டவரானாலும், திருமாலின் அருளால் தோன்றியவராதலால் இயற்கையிலேயே உலகப் பற்றற்று எம்பெருமானுடைய திருவடித் தாமரைகளில் மனம் வைத்து, குலத்திற்கேற்ப யாழ் இசைப்பதில் தேர்ச்சியும் பெற்றார்.

இவர் தாழ்ந்த குலத்தினர் என்பதால் திருவரங்கப் பெரிய கோயிலுக்குவெளியேநின்று யாழிசைப்பாடி திருவரங்கப் பெருமானுக்கு 'லோக சாரங்கர்' என்னும் அந்தணர் தலைவர் தீர்த்தம் எடுத்துச் செல்லுகையில் வழியில் நின்று ஆழ்வார் இவ்வுலகச்சூழலை மறந்து பாடிக்கொண்டிருந்தார். அப்போது இவர் விலகிச் செல்லாததால் பலர் இவர்மீது கற்களை வீசிச் சென்றனர்.

பக்தர்களது உள்ளத்தில் குடிகொண்டுள்ள அரங்கனது நெற்றியில் அக்கல்லடிபட்டு இரத்தம் கசிந்தது. அதைக் கண்டு லோக சாரங்கர் கவலை யுற்றார். பெருமாள் அவர் கனவில் தோன்றி, "அன்பனே! நீ பாண் பெருமானை இழிவாகக் கருதாமல் அவரிடம் சென்று உன்னுடைய தோளில் எழுந்தருளப் பண்ணி வருக", என்று கட்டளை இட்டார்.

அவரும் அவ்வாறே சென்று பாணர் திருவடியில் விழுந்து வணங்கி பெருமாள் கட்டளையைக் கூறினார். அதற்கு திருப்பாணாழ்வார், "நீசனான அடியேன் திருவரங்கப் பெருநகரை மிதிப்பது தகாது" என்று கூற அவரது கால் படாமல் லோக சாரங்கர் அவரைத் தோளில் தூக்கிச் சென்று ஸ்ரீரங்கநாதர் திருமுன்பு இறக்கினார். ஆழ்வாரும் அரங்கனது விக்கிரகத்தை உச்சி முதல் உள்ளங்கால் வரை கண்குளிரக் கண்டு ஆனந்தித்து அவன் அழகை அனுபவித்து அதிசயம் அடைந்து, 'அமலனாதிப் பிரான்' என்ற பாசுரத்தைத் திருவாய் மலர்ந்தருளினார். எம்பெருமான் அதனை அங்கீகரித்து அருளத் திருப்பாணாழ்வார் அனைவரும் காணப் பெரிய பெருமாள் திருவடியில் சேர்ந்தார். எனவே அமனாதி பிரான் பாசுரம் லோக சாரங்கர் தோள்மீது இருந்து பாடியது.

குணம் செயல்களை அடிப்படையாகக் கொண்டு நான்கு வகை சாதிகளையும் தானே படைத்னாக வேத முதல்வனாம் திருமால் ஸ்ரீமத் கீதை

யல அருளினான். அவனே சாதி யுயர்ச்சியிலும், பக்தி முதிர்ச்சிக்கே முதலிடம் கொடுத்துள்ள செய்தி நம் திருப்பாணாழ்வார் வாழ்க்கை வரலாற்று நிகழ்ச்சியால் பெறப்படுகின்றது.

எனவே இவர் வரலாற்றால் உணர்வு நிலை நின்று பெருமாளும் ஆழ்வாரும் அந்தரங்கமாக அனுபவித்தனர். ஆழ்வார் அனுபவித்த ஆத்வானுபவமே ஆழ்வாரின் பெருமையை உலகறியச் செய்தது என்றறிய முடிகின்றது. எனவே திருமாலடியார் தம் பக்தி பிரபக்தி மேலிட்டால் சாதி வேற்றுமைகளைக் கடந்தவர்கள் என்பதை உணர்ந்து கொள்ள வேண்டும்.

திருவேங்கடமுடையான் குயவர் மரபில் உதித்த குறும்பலுத்த நம்பியால் தமக்கு சமர்ப்பிக்கப் பெற்ற மண்ணினால் செய்யப்பட்ட பூக்களை ஏனையர் அர்ச்சித்த நறுமண மலர்களிலும் பெருவிருப்போடு ஏற்றது,

காஞ்சிபுர தேவராசன் வணிகர் மரபினராக திருக்கச்சி நம்பியின் திரு ஆலவட்ட கைங்கர்யத்தில் உகந்து அவரோடு உரையாடி மகிழ்ந்தது,

போன்ற நிகழ்ச்சிகள் மூலம் சாதி சமய வேறுபாடுகளைத் திருமாலடியார்கள் கடந்தவர்கள் என்பது மெய்ப்பிக்கப்பட்டுள்ளது. அத்துடன் திருப்பாணாழ்வார் வரலாறும் ஒருங்கு வைத்து எண்ணத்தக்கதாகும்.

எனவே அமலனாதிபிரான் பாசுரம் திருப்பாணாழ்வார் வாழ்வின் உன் நுகழசசுகளை உணர்வோடு சுட்டிக் காட்டுகின்றது. அனைத்திற்கும் மேலானது பக்தியே என்பதை உணர்த்துகின்றது.

அரங்கத்துப் பெருமான் முதலில் தானாகவே திருப்பாணாழ்வார்மீது வலிய அன்பு செலுத்தி அடிமை கொண்டதாகவும், பிறகு தமக்கேற்பட்ட அந்த சுவையான இன்ப சுகத்தில் தாமாகவே வேண்டி விரும்பிச் சென்று அவன் திருவடி பற்றியதாகவும் தம் முதலிரண்டு பாசுரங்களில் பாடியுள்ளார். முதற் பாசுரத்தில் அத்திருவடிகளின் அழகைப்பேசினார். இரண்டாம் பாசுரத்தில் சிவந்த ஆடையின்மேல் தம் சிந்தை சென்றதைப் பேசினார். திருப்பிதாம்பரத்தின் அழகு திருநாபிக் கமலத்தில் வீசியதை மூன்றாம் பாசுரத்திலும் திருவுதர பந்தனத்தை நாலாம் பாசுரத்திலும், திருமார்பின் அழகை ஐந்தாம் பாசுரத்திலும் பேசினார்.

கண்டத்தின் அழகு தன்னை உட்கொண்டதை ஆறாம் பாசுரத்திலும், வாயின் அழகைக் கண்டு சிந்தை இழந்தமையை ஏழாம் பாசுரத்திலும், திருக்கண்கள் அறிவை அழித்து விட்டமையை எட்டாம் பாசுரத்திலும் பேசினார். திருமேனியோ தன்னிடம் உள்ளதையெல்லாம் கொண்டு சென்றதென்று ஒன்பதாம் பாசுரத்திலும் பேசினார்.

பத்தாம் பாசுரத்தில் பெரிய பெருமானது 'அழகைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணா' என்று அவரோடு அந்தர்பவித்தபடியைப் பேசினார். இந்தப் பத்துப் பாசுரங்களிலும் ரஹஸ்ய த்ரயத்தின் அர்த்தமும், அர்த்த பஞ்சகங்களும் நிறைந்திருக்கின்றன. இவ்வாறு எல்லாப் பொருள்களையும் தன்னுள் கொண்டுள்ளது இத்திவ்யப் பிரபந்தம்.

அமலனாதிபிரான் பாசுரத்தின் அரும்பொருள்கள், பெரிய வாச்சான் பிள்ளை, அழகிய மணவாளப் பெருமாள்நாயினார், ஸ்ரீவேதாந்த தேசிகர் என்ற மூன்று மகாசார்யர்கள் அருளிய வியாக்யானங்களிலே காணலாம்.

எனவே இத்திவ்யப் பிரபந்த பாசுரத்தை நாளும் சேவித்து அவர் திருவடி நிழலில் ஒதுங்கி வாழ்வோமாக! திருப்பாணாழ்வார் திருவடிகளே சரணம்!

'ஆழ்வார்கள் வாழி; அருளிச் செயல் வாழி!
தாழ்வாதும் இல்குரவர் தாம்வாழி! - ஏழ்பாரும்
உய்ய அவர்கள் உரைத்தனவைகள் தாம்வாழி!
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.





# வைத்தீசுவரன் கோயில்

டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ணநாயுடு,
கோயம்புத்தூர்.

திருத்தலங்குள் வைத்தீசுவரன் கோயில் முக்கியமானதொன்றாகும்.

திருக்கோயிலின் பெயரே திருத்தலத்து ஊருக்கும் உரியதாக வழங்கப் பெற்று வருகின்றது. தலமும் கோயிலும் வேறுபாடின்றி விளங்குந்திறத்தினை இது விளக்குகின்றது.

வைத்தீசுவரன் கோயில் என்னும் திருத்தலம், தஞ்சை மாவட்டத்தில் அமைந்துள்ளது. சென்னை - மாயவரம் புகைவண்டிப் பாதையில் உள்ள சீர்காழிக்குத் தெற்கே சுமார் மூன்றரை மைல் தொலைவில் அமைந்துள்ளது. முருகன் அருள் மணக்கும் தலம் இது.

முருகப் பெருமான் தாரகாசுரனோடு புரிந்த போரில் பூதப்படை வீரர்கள் காயமுற்றனர். அவர்கட்கு வைத்தியம் செய்ய முருகப் பெருமான் தம் அம்மையப்பரை அழைத்தார். சிவபெருமான் வைத்தியநாதராகவும், அன்னை சக்தி தையல் நாயகியம்மையாகவும் வந்து சேர்ந்தனர்.

அம்மையும் அப்பனும் இருவரும் வரும்போது வைத்தியத்திற்குத் தேவையான தைலப் பாத்திரம், சஞ்சீவி, வில்வமரத்து அடிமண் ஆகியவற்றை எடுத்துக் கொண்டு இத்தலத்திற்கு வந்து சேர்ந்தனர். இக்காரணம் பற்றியே இத்தலத்திற்கு வைத்தீசுவரன் கோயில் என்னும் திருப்பெயர் அமைந்தது.

இவ்வாறு வைத்தீசுவரன் என்னும் திருப்பெயர் பெற்ற இத்தலத்தில் எழுந்தருளிய இறைவனை, புள் (சடாயு), இருக்கு (வேதம்), வேள் (முருகவேள்), ஊர் (சூரியன்) ஆகிய நால்வரும் வழிப்பட்டனர். இந்நால்வர் வழிபாடு காரணமாக புள் + இருக்கு + வேள் + ஊர் — புள்ளிருக்குவேளூர் என்னும் திருப்பெயரையும் இத்தலம் பெற்று விளங்குகின்றது.

இத்திருக்கோயிலின் கிழ்த்திசையில் பைரவரும், மேற்றிசையில் வீரபத்திரரும், தென்றிசையில் கற்பக விநாயகரும், வடதிசையில் காளியும் காவல் தெய்வங்களாகக் கோயில் கொண்டு விளங்குகின்றனர்.

இக்கோயிலில் ஒரு பெரிய வேப்ப மரத்தைக் காணலாம். இந்த வேப்ப மரமே இத்தலத்தின் புனித மரம். இப்போது இப்புனித மரம் 'வேம்படிமால்' என வழங்கப்படுகின்றது. இந்த வேப்ப மரத்தில் அடியில் உள்ள சிறிய கோயிலில் ஆதிவைத்தியநாதப் பெருமாள் காட்சி அளிக்கின்றார். இதனையடுத்துள்ள கட்டைக் கோபுரத்தின் அருகில் ஆதிபுரேணேசுவரர், வீரபத்திரர் சந்நிதிகள் அமைந்திருக்கின்றன. இரண்டாம் பிராகாரத்தின் கிழக்குப்பகுதியில் உள்ள சந்நிதியில் அன்னபூரணதேவி காட்சியளிக்கின்றாள். இவ்விராண்டாம் பிராகாரத்தின் தென்பகுதியில் தையல் நாயகியம்மன் திருச்சந்நிதியும், அதன் எதிரில் சித்தாமிர்தத் தீர்த்தமும் அமைந்துள்ளன.

இவ்விரண்டாம் பிராகாரத்தின் மேற்குப் பாகத்தில் குமரகுருபரர் என்று வழங்கப்படும் ஆறுமுகப் பெருமானின் திருச்சந்நிதி அமைந்துள்ளது. இப்பெருமாள் வள்ளி தெய்வயானையோடு தங்கக் கவசம் அணிந்து அருட்காட்சி தருகிறார். இப்பெருமானது உற்சவமூர்த்தி செல்வமுத்துக்குமாரர். இவரைக் கண்குளிரக் கண்டு வணங்கி வழிபட்டால் செல்வம் பெருகி வரும் என்பது நம்பிக்கை.

சித்தாமிர்தத் தீர்த்தத்தையடுத்துள்ள மண்டபத்தில் தையல்நாயகியம்மான் திருச்சந்நிதி அமைந்துள்ளது. இம்மண்டபத்தின் கீழ்ப்பக்கம் வைத்தியநாதப் பெருமானின் திருச்சந்நிதி காட்சி அளிக்கின்றது.

முதற் பிராகாரம் மூலத்தானத்தைச் சுற்றிச் செல்கின்றது. இப்பிராகாரத்தின் மேற்குப் பாகத்தில் வள்ளி தெய்வயானையோடு, செல்வ முத்துக்குமாரருக்கும், சுஜலக்குமிக்கும், அட்டலக்குமிக்கும் திருச்சந்நிதிகள் அமைந்துள்ளன.

முதற்பிராகாரத்தின் வடபாகத்தில் சிவகாமியோடு நடராஜருக்கும், கிழக்குப் பாகத்தில் ஏழு நவக்கிரக தெய்வங்களுக்கும் திருச் சந்நிதிகள் அமைந்து உள்ளன. இம்முதற்பிராகாரத்தின் தெற்குப் பாகத்தில் அறுபத்து மூவர்க்கும், சப்த கன்னியர்க்கும் சந்நிதிகள் அமைந்துள்ளன.

மூலத்தானத்தில் மேற்கு நோக்கிய வண்ணம் வைத்தியநாதப் பெருமாள் சிவலிங்கத் திருமேனியில் திருக்காட்சி அருள்கின்றார்.

பிணி தீர்க்கும் இப்பெருமான் திருவருளைப் பெற பக்தர்கள் நாள் தோறும் வருகின்றனர். சித்தாமிர்தத் தீர்த்தத்தில் நீராடி இப்பெருமானை வழிபட்டு வந்தால், நீங்காத நோயெல்லாம் நீங்கி நலம் பெறுவர் என்று நம்பிக்கை. ஆயினும் இத்தடாகத்தை அடிக்கடி சுத்தம் செய்விக்க கோயில் நிர்வாகஸ்தர்கள் முயன்று வருகின்றனர். இத்தலத்தில் செல்வ வளத்தைப் பெற செல்வ முத்துக்குமாரரையும், நோயற்ற வாழ்வை அடைய வைத்தியநாதப் 'பெருமானையும் கண்டு பக்தியுடன் வழிபடுதல் வேண்டும் என்பது பக்தகோடிகளின் நம்பிக்கை.

இவ்வாறு பிள்ளையும் அப்பனும் பெருமை கொண்டு விளங்கும் இத்தலத்தில் நிகழும் திருவிழாக்கள் பலவாகும். மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூன்றும்இங்குச் சிறப்புடையன. ★

# பெருமாள் கைங்கர்யம்

ராட்சி அலுவலகத்தின் பின்புறம்- ஒரு சிறிய மேடைமேல் வீற்றிருக்கிறான் ஸ்ரீ பாலாஜி வெங்கடேஸ்வரப் பெருமாள். அவரின் திருப்பாதங்களில் எப்போதும் சேவை புரிந்து கொண்டிருப்பவர், யாமுனாச்சாரியார். சிவந்த ஒல்லியான தேகம், நெற்றியிலும், மேனியிலும் எப்போதும் இட்டு, இட்டுத் தழும்பேறிப் போன திருமண-ஸ்ரீசூர்ணக் குறிகள். ஓரிடத்திலும் நிற்காமல், சுறுசுறுப்பாகப் பெருமாள் கைங்காயத்தில், தன்னையே மறந்து திளைக்கும் பக்தர்-60 வயதான யாமுனாச்சாரியார்

"வெட்ட வெளியில், வானமே கூரையாக, பூங்காவே கோயிலாகக் கொண்டு, இந்தச் சிறிய மேடையில் இருக்கும் பெருமாளுக்கு, ஊழியம் பண்ண உங்களுக்கு எப்படித் தோன்றியது?" நாம கேட்டோம்.

சமுத்திரத்தில் குளித்த ஈரம் சொட்டச் சொட்ட, தான் முகந்து வந்த உப்பு நீரால், எம்பெருமானை முழுக்காட்டியபடியே சொல்லத் தொடங்கினார் பெரியவர்.

"நா இன்னிக்கு நேததிக்குப் பெருமாள் சேவை பண்ணலே. 8 வருஷமா இது நடக்கிறது. ரோடியர் மில்லிலே கிளார்க்கா இருந்து, வேலை போயிட்ட நேரம். இந்தப் பக்கம் ஏதோ சிந்தனையா வந்துண்டு இருந்தேன். அப்போ யாரோ என் காதுப் பக்கமா, என்னமோ சொல்ற மாதிரி தோணித்து. தற்செயலா நிமிர்ந்து தும்புமா 'தேம்ம'ன்னு நின்னுண்டிருக்கார். அவர் கணல, ஏதோ சொல்ல வர்ற ஏக்கம்...

எனக்கு எப்பவுமே பெருமாள் பக்தி அதிகம். இதைப் பாத்துட்டேனா? அதே நினைப்பில ராத்திரி தூங்கிட்டேன். கனவுல, யாரோ ஒரு பெரியவர் முகத்தில் தேஜஸ்ஸுடன்.. 'இராப்பகலா பட்டினி இருக்கேன். என்னை கவனிக்கக் கூடாதா?'ன்னு கேட்டு மறைஞ்சிட்டார். உடனே முழிப்பு வந்ததுதான். அதுக்கப்புறம் ஒரு முடிவுக்கு வந்தேன். மறுநாள்ளயிருந்து என் பணி தொடங்கப்பட்டாச்சு...".

நிம்மதி கலந்த பெருமூச்சுடன் நிறுத்துகிறார் ஐயங்கார்.

இவருக்குப் பூர்வீகம், சீர்காழிக்கு அருகிலுள்ள திருவாலி. மக்கள் செல்வத்துக்குக் குறைவில்லை. இவரது தம்பிகள், கடலூரையடுத்த திருவஹீந்திபுரம் பெருமாளுக்குக் கைங்கர்யம் ஆற்ற, இவர் இங்கே

"திடுதிப்புனு இப்படி பூஜை, அது இதுன்னு பண்றதுக்கு, அரசாங்கத்துல எதுவும் சொல்லலையா?"

"உம்... சொல்லாம இருப்பாளா? 'யார்கிட்ட பர்மிஷன வாங்கிட்டு செய்றீங்க, என்ன ஏதுன்னு' எல்லாம் டெய்லா கேட்டுண்டு 'நாளைக்கு ஆபீசுக்கு வந்து பாருங்கோ'ன்னுட்டுப் போயிட்டா. ராத்திரியெல்லாம் பகவான்ட்ட பிரார்த்தனை தான்... மறுநா, அவன்மேல் பாரத்தைப் போட்டுட்டு, ஆபீசுக்குப் மேற்கொண்டு ஒரு வார்த்தை பேசாம, 'ஸ்வாமி, போய் உங்க இஷ்டப்படியே பண்ணுங்கோ. ஆபீசர் பர்மிஷன் கொடுத்தாச்சு' அப்படின்னு யாரோ சொன்னா. நேக்கு அப்படியே புல்லரிச்சுப் போச்சு! பெருமாளோட மகிமையாலே, எத்தனை தடங்கல் விலகித்து... ஹூம். நானே சொல்லிண்டா, குழந்தையைப் பத்தித் தாயார் சொல்லிக்கற மாதிரி ஆயிடும்.."என்றார் பெருமையுடன்.

சங்கு சக்ரதாரியாக விளங்கும் பெருமானின் சங்கில கொஞ்சம் பின்னம் இருக்கிறது. அதைப்பற்றிக் கேட்டபோது-

"ஒருநா, அந்திசாயற நேரம், அதிக ஜனநடமாட்டம் இல்லாத இந்தத் தெருவில, வழியோட போற ஒருத்தர் என்னிடம்'என்னங்காணும்! பெருமாளின் சங்கு பின்னமடைஞ்சிருக்கே! இதைப் போய் ஆராதிக்கலாமா'ன்னு கேட்டார். நா கொஞ்

செல்வி. நடாதூர். வி. திருமகள்
புதுவை.

சம் ரோஷத்துடன் 'உங்க குழந்தைகள் யாருக்காவது கைகால் ஊனமாயிருந்தா, காப்பாத்தாம விட்டுருவேளா'ன்னு சொல்லிட்டேன். அப்புறம நிமிர்ந்து பாத்தா, அங்கே யாரையுமே காணோம்! பெருமாளே என வாயைக் கிளறியிருக்காரோ என்னமோ..." என்று நிறுத்தினார்.

பேசிக்கொண்டே அபிஷேக ஆராதனைகள், அலங்காரம முடிந்து, ஒரு தாம்பாளத்தில் கொட்டியிருந்த உப்பு

அள்ளிப் பெருமாளுக்குச் சுற்றி, திருஷ்டி கழித்தார்.

தினமும் இரண்டு வேளை வந்து விளக்கேற்றி,வழக்கமான ஆராதனை செய்வதில், இவருக்கு ஆகும் செலவு மாதம் சுமார் ரூ. 150க்கு மேல். இதற்கு அரசாங்க உதவி எதுவும் இல்லை என்றாலும், ஒரு வாட்ச் மேன் மட்டும் உண்டு. ராகுகால, பௌர்ணமிப் பூஜைகளும், விசேஷ நாட்களில் தீபஅலங்காரமும் பக்தர்களால் தரிசிக்கப்படும்.

அவ்வப்போது ஐயங்கார், அருள் வாக்கும் சொல்வதுண்டாம். வெளியில் சொல்லாமல், யாராவது பக்தர் வந்து, பகவானுக்கு ஏதாவது அளித்துப் போவதும் வழக்கம்.

ஒரு புற்று உள்ளது. அதிலுள்ள பாம்புக்குப் பால், எலுமிச்சம்பழம் வைக்கிறார்கள். மற்ற கோயில்களைப் போலன்றி, இந்தப் பெருமாள் கோயிலில் துளசி, குங்குமத்துடன், விபூதியும் தரப்படுகிறது. காரணம்?

"8 வருஷமா சபரிமலைக்குப் போயிண்டிருக்கேன். அதில 3 வருஷம் பாத யாத்ரை. இங்கே சாஸ்தா ஆராதனையும் உண்டு. அதான் விபூதி..." என்ற பெரியவரிடம்,

"திறந்தவெளியா இருக்கே, இங்கே பூஜை சாமான்களெல்லாம் திருடு போகாதோ" என்ற சந்தேகம் எழுப்பினோம்.

இன்னும் சில சாமானெல்லாம் திருடு போய், அப்புறம் திருடினவாளே ஓசைப்படாம வந்து, சாமானை வச்சுட்டுப் போயிருக்காளாக்கும்... போறுமா" என்று, உலகளந்தானின் க்ருபைக்கு உதாரணம் காட்டினார்.

"கடைசியா ஒரு கேள்வி. 'பெருமாளுக்குன்னு கோயில் கட்டணும், இன்னும் வசதி பண்ணணும்னு எல்லாம் உங்களுக்கு ஆசை இருக்குமே.." என்றதற்கு, அவர் சொன்ன பதில் நமக்கு வியப்பைத் தந்தது. "அது தான் இடையாது. என் ஸ்வாமி எப்பவும், ஏழைப்பங்காளனா, ஜனங்களோட ஜனங்களா இருந்து எல்லாத்தையும் பாக்கறார். நானே விரும்பினாலும், இன்னும் கொஞ்ச காலத்துக்கு அவருக்கு ஏதும் வசதி பண்ணக்கூடாதுன்னு உத்தரவு. நிறைய கஷ்ட நஷ்டம் பாத்தாச்சு. என் மூச்சு இருக்கற மட்டும், இப்படியே காலத்தைக் கழிச்சுடுவேன். அந்த ஆனந்தம் வேற எதுலயும் வராதும்மா..." கண்களில் நீர் பனிக்க, யாமுனாச்சாரியார் முடித்தபோது,

"அரிசினத்தால், ஈன்ற தாய் அகற்றிடினும் மற்று அவள்தன்
அருள் நினைந்தே அழும் குழவி,
அதுவே போன்றிருந்தேனே'

என்ற குலசேகராழ்வார் கூற்றே நம் நினைவில், எட்டிப்பார்த்தது.



ஸ்ரீ பாலாஜி வெங்கடேசப்பெருமாள்



# 1991-ஆம் வருட நாட்டி

## (தேதிகள் - கிழமைகள் - மாதங்கள்)

| தே | தி | க | ள் | * | ஜனவரி அக்டோபர் | பிப்ரவரி மார்ச் நவம்பர் | ஏப்ரல் ஜூலை | மே | ஜூன் | ஆகஸ்ட் | செப்டம்பர் டிசம்பர் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 8 | 15 | 22 | 29 | செவ்வாய் | வெள்ளி | திங்கள் | புதன் | சனி | வியாழன் | ஞாயிறு |
| 2 | 9 | 16 | 23 | 30 | புதன் | சனி | செவ்வாய் | வியாழன் | ஞாயிறு | வெள்ளி | திங்கள் |
| 3 | 10 | 17 | 24 | 31 | வியாழன் | ஞாயிறு | புதன் | வெள்ளி | திங்கள் | சனி | செவ்வாய் |
| 4 | 11 | 18 | 25 | * | வெள்ளி | திங்கள் | வியாழன் | சனி | செவ்வாய் | ஞாயிறு | புதன் |
| 5 | 12 | 19 | 26 | * | சனி | செவ்வாய் | வெள்ளி | ஞாயிறு | புதன் | திங்கள் | வியாழன் |
| 6 | 13 | 20 | 27 | * | ஞாயிறு | புதன் | சனி | திங்கள் | வியாழன் | செவ்வாய் | வெள்ளி |
| 7 | 14 | 21 | 28 | * | திங்கள் | வியாழன் | ஞாயிறு | செவ்வாய் | வெள்ளி | புதன் | சனி |

பார்வைக்கு :- ஜனவரி மாதம் 22-ஆம் தேதிக்கான கிழமை என்ன என்று அறிய, 22-ஆம தேதிக்கு எதிரில், ஜனவரி மாதத்தின் அடியில் உள்ள கட்டத்தைப் பார்த்தால் தெரியும். (செவ்வாய்கிழமை).

திரு. எஸ். சண்முகம், சண்முகநாதபுரம், பசும்பொன் மாவட்டம்.

தாமதிக்கலாமா? மானிடராகப்பிறந்த வர்களில் குற்றம் செய்யாதவர் யார்? அரிசிச் சோற்றிலே கல்லை ஆயலாம். ஆனால் மணல் சோற்றில் கல்லை ஆயலாமா? குற்றம் காண்பது மணல் சோற்றில் கல் ஆய்வது போலாகும். 'என் அடியார் அது செய்யார், செய் தாரேல் நன்று செய்வார்' என்றது பொய்யோ....

அது போகட்டும். நீர் மட்டு மென்ன, ராமாவதாரத்திலே, பத்து மாத காலமாக என்னை அசோக வனத்திலிருந்து மீட்காமல் இருந் தீரே. அது குற்றமல்லவா? குற்றம் பார்க்கில் சுற்றமில்லை. எனவே நீர் ஆழ்வாரை இன்னும் துன்பப்படுத்தா மல் விரைவில் இரட்சிக்கவேண்டும். சுவாமி! உமது கருணையே கருணை! இராமாவதாரத் தில் அரக்கர்கள் உமக்கோ! எனக்கோ! எந்த தீங்கும் செய்ய வில்லை. இருப்பினும் உமது அடிய செய்தமையால் அவர்களைக் கொன்றீர்! உமது அடிய வர்கட்காக நீர் நன்மைகள் செய்யத் தயங்க மாட்டீர் என்பதை நன்கு அறிவேன். விரைவில் நமது திரு மங்கை ஆழ்வாருக்கு அருளுவீராக!

தி.வே.: எனதருமைப் பத்தினியே! அலர்மேல் மங்கையே! நீயன்றோ! கருணைக்கடல். பசுவானது அன்று ஈன்ற கன்றின் மீதுள்ள அழுக்கை யெல்லாம் தான் உண்டு கன்றைக் காப்பது போல, உன் ஆத்மக் குழந் தைகளாகிய பாகவதர்களின் குற்றங் களையெல்லாம் நீ ஏற்று அவர்கள் அருள்பெற பரிந்துரைக்கும் பத்மா வதி! நீ பரிந்துரைத்தபின்னும் தாம திப்பேனா! இப்போதே அருள்புரி கின்றேன்.

தி.வே.: ஆழ்வாரே! வாரும்! நீர் அருள் பெறுவதற்கு எவ்வகை யிலும் தகுதி பெற்றவரே! இருப் பினும் நீர் உமது ஆத்மத் தாயாகிய தால் தாமதித்தோம். இனி உமக்கு அருள் புரியத் தடையில்லை! இன்று இத்திருவேங்கடமலைக்கு எழுந் தருளி எம்மை மங்களா சாசனம் (பாடியது) செய்ததைப் போல, நான் எழுந்தருளியுள்ள திவ்விய தேசங் களையெல்லாம் தரிசித்து மங்களா சாசனம் செய்து வாரும். விரைவில் உமக்கு பரமபதம் நல்குகின்றேன். (அர்ச்சகர் மூலமாக தீர்த்தம், திருத் துழாய், சடாரி பிரசாதம் தந்தருளி னார்.)



திருமலை பவித்ரோத்சவத்தின் போது

முடிவுரை :

இந்த உரையாடல் மூலம் திரு மங்கையாழ்வாரும், திருவேங்கட வனும், அலர்மேல்மங்கையும், நாம் இவ்வுலகில் கடைபிடிக்க வேண்டிய கீழ்க்காணும் தருமங்களை நமக்கு எடுத்துரைத்தனர். திருமங்கை யாழ்வார் மக்கள் செய்யும் தவறு களை எல்லாம் தாம் செய்ததாகக் கூறி திருவேங்கடமுடையவனிடம் சரணடைந்து மன்னித்து அருளும்படி வேண்டுகின்றார்.

1. திருவேங்கடமலையும் — திரு வேங்கடவனும் — அலர்மேல் மங்கை யும் நமது பாபங்களைப் போக்கி அருள்புரிவர்.

2. அடியவர்கள் குற்றங்களைக் குணமாகக் கொள்வான் இறைவன்.

3. நாம் செய்யும் நல்வினை — தீவினைப் பயன்களை அனுபவித்தே தீரவேண்டும்.

4. நாம் குற்றங்களை உணர்ந்து அவற்றுக்காக வருந்தி, மனம் திருந்தி சரணாகதி செய்தால் இறைவன் நமது பாபங்களைப் போக்கி அருள் புரிவான்.

5. இறைவன் நமது ஆத்மாவிற் குத் தந்தையாகவும், பிராட்டி நமது ஆத்மாவிற்குத் தாயாகவும் உள்ள னர்.

6. பகவானுக்கும், அடியவர் களுக்கும் (பாகவதர்களுக்கும்) நாம் தவறாது தொண்டு செய்யவேண்டும்.

7. நேர்மையாக, உழைத்துத் தேடும் பொருளே இறைவன் தொண் டிற்கு உரியது.

எனவே நாம் அறநெறி தவறாது இறைவனுக்குத் தொண்டு செய்து இறுதியில் இறைவன் திருநாடு சேர் வோமாக! ★

# சிறப்புமிக்க திருத்தலங்கள்

திரு. ஆர். எஸ். சுப்ரமணியம,
குடியாத்தம்.

1. சேலம் அருகே கந்தாஸ்ரமம் என்ற தலத்தில் பதினெட்டு அடி பஞ்சமுக கணபதியும், பதினெட்டு கைகளுடன் அஷ்டதசபுஜ மகா லட்சுமியும் உள்ளனர்.

2. திருவையாறு என்ற தலத்தில் முருகன் வில்லும், அம்பும் ஏந்தி உள்ளார்.

3. சென்னிமலை என்ற தலத்தில் அக்னிஜாத சுப்ரமணியர் இரண்டு தலைகளுடனும், சௌரபேய சுப்ர மணியர் நான்கு தலைகளுடனும், சரவணபவர் மற்றும் தேவசேனாதி பதி ஆறு தலைகளுடனும் உள்ளனர்.

4. பழனி தண்டாயுதபாணி நவ பாஷாணம் என்ற ஒன்பது வித மூலிகைகளால் பிரதிஷ்டை செய்யப் பட்டுள்ளார்.

. திருச்செங்கோடு தலத்தில் சிவ பார்வதி இணைந்த வடிவான அர்த்த நாரீஸ்வரர் உள்ளார். மேலும் இங்கு மலையில் அறுபது அடி உயர நாகம் செதுக்கப்பட்டுள்ளது.

6. பெருந்துறை என்ற தலத்தில் சிவலிங்கத்திற்குப் பதிலாக ஆவுடை யார் மட்டும் உள்ளது. உமையவ ளுக்குப் பதிலாக அவளது பாதங்கள் மட்டுமே உள்ளன.

7. சங்கரநாரயணர் கோவில் என்ற தலத்தில் மூலவர் ஒரு பாதி சிவனும், மறுபாதி நாராய ணனுமாக உள்ளனர்.

8. சோளிங்கபுரம் என்ற தலத்தில் நரசிம்மசுவாமி அக்காரக்கனி என்ற மூலிகைகளால் ஆனவர். இவருக்கு அபிஷேகம் செய்யப்படுவதில்லை.

9. உடுப்பி கிருஷ்ணரை நவத் துவாரம் என்ற ஒன்பது வாயில் உள்ள ஜன்னல் வழியாகத்தான் தரி சிக்க இயலும்.

10. திருநாகேஸ்வரம் என்ற தலத் தில் ராகு பகவானுக்கு அபிஷேகம் செய்யும்போது பால் நீல நிறமாகி பின்பு சற்று வெண்மையாக மாறு கிறது

11. திருக்கழுகுன்றம் என்ற தலத் தில் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை குளத்தில் சங்கு தோன்று கிறது.

12. கும்பகோணத்தில் பன்னி ரண்டு ஆண்டுக்கு ஒரு முறை மாமாங் கம் என்ற விழா நடக்கின்றது.

13. அலஹாபாத்தில் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை கும்பமேளா என்ற விழா நடைபெறுகிறது.

14. திருப்புன்கூர் என்ற தலத்தில் நந்தனாருக்காக நந்தி சற்று விலகி உள்ளது.

15. கர்நாடக மாநிலம் கோகர் ணம் என்ற தலத்தில் ராவணன் கொணர்ந்த ஆத்மலிங்கம் பன்னி ரண்டு ஆண்டுக்கு ஒருமுறை வெளியே எடுக்கப்பட்டு பூஜை நடைபெறு கிறது. மேலும் இங்கு வினாயகர் இரண்டு கரங்களுடன் உள்ளார்.

16. ஊத்துக்கோட்டை அருகே சுருட்டுப்பள்ளியில் சிவன் சயனத் திருக்கோலத்தில் உள்ளார்.

17. நாச்சியார் கோயில் என்ற தலத்தில் கல்லால் ஆன கருடன் உள்ளார். இவரை முதல் வாசலில் நான்குபேரும், இரண்டாவது வாச லில் எட்டுபேரும், மூன்றாவது வாச லில் பதினாறுபேரும், நான்காவது வாசலில் முப்பத்துஇரண்டுபேரும் முடிவாக அறுபத்திநான்குபேரும் எழுந்தருளப் பண்ணுவார்கள்.

18. பட்டீஸ்வரத்திலும், அம்மன் குடியிலும் உள்ள அஷ்டபுஜ துர்க்கை தனிச்சிறப்பு வாய்ந்தது.

19. திருச்செந்தூர் முருகன் ஆல யத்தில் விபூதியை பன்னீர் இலையில் வைத்து தருகின்றனர். இதற்கு பத்ர பூதி என்றும் சொல்வர். இம்மாதிரி வேறு எங்கும் தருவதில்லை.

20. வைதீஸ்வரன் கோயில் என்ற தலத்தில் விபூதி, வில்வ இலை மற் றும் சில பொருட்கள் சேர்த்து சிறு சிறு உருண்டைகளாக கடுகு அளவில் தருகின்றனர். இது காய்ச்சல் மற்றும் வியாதிகளுக்குப் பயன் படுகிறது.

21. வானமாமலை என்ற விஷ்ணு ஸ்தலத்தில் பெருமாளுக்கு அபிஷே கம் செய்த எண்ணையை அதற் கென்று உள்ள கிணற்றில் ஊற்றி விடுகின்றனர். இது என்றைக்கும் கெடுவது இல்லை. இந்த எண்ணை மருத்துவத்திற்கும் பயன்படுகின்றது.

22. இராமேஸ்வரத்தில் ஸ்ரீ ராம பிரான் பிரம்மஹத்தி நீங்க சிவனை வழிபட்டார். திருப்பைஞ்ஞீலியில் பிரம்மஹத்தி நீங்க சிவபெருமான் விஷ்ணுவை வழிபட்டார்.

23. திருவெள்ளறை என்ற விஷ்ணு தலத்தில் தட்சிணாயண காலத்திற்கும், உத்தராயண காலத் திற்கும் தனித்தனிப்படிகள் உள்ளன.

24. கும்பகோணம் சாரங்கபாணி ஸ்வாமி கோயிலில் தட்சிணாயன கால வாசல் தனியாகவும், உத்தரா யண கால வாசல் தனியாகவும் உள்ளது. மேலும் இரத வடிவில்

சக்கரங்களும், குதிரைகளுடன் மூலஸ்தானம் அமைக்கப்பட்டு உள்ளது.

25. தஞ்சை மாவட்டத்தில் திருமணம் நடக்க வேண்டி திருமணஞ்சேரி இறைவனையும், பிள்ளைப்பேறு வேண்டி திருக்கருகாவூர் இறைவியையும் வழிபட்டுப்பயன் அடைகின்றனர்

26. நந்திபகவான் பெரிய அளவில் உள்ள ஸ்தலங்கள். 1. ஆந்திர மாநிலம் லேபாக்ஷி, 2. தஞ்சாவூர் பிரகதீஸ்வரர் ஆலயம், 3. மைசூர் சாமுண்டேஸ்வரி மலை.

27. சங்குகளை இழைத்து அதன் மூலம் ஸ்தாபிதம் செய்த நந்தி உள்ள ஸ்தலம் சுசீந்தரம்.

28. திருநல்லூர் என்ற சிவஸ்தலத்தில் பகல் ஒன்றில் ஆறு நாழிகைக்கு ஒரு தடவை தாமிர நிறம், இளஞ்சிவப்பு நிறம், தங்கம் பச்சை, ஆகிய நான்கு நிறங்களில் சிவலிங்கம் காட்சியளிக்கின்றது.

29. திருவாரூர் திருக்குளம் ஐம்பது தண்டம் நீளம், அகலம் உடையது. மற்றும் இங்குள்ள ஆழித்தேர் தமிழ்நாட்டிலேயே தனிச்சிறப்பு வாய்ந்தது.

30. திருவெண்காடு என்ற தலத்தில் சூரிய தீர்த்தம், சந்திர தீர்த்தம். அக்னி தீர்த்தம் என்ற மூன்று குளங்கள் கோயிலின் உள்ளேயே அமைந்துள்ளன.

31. திருக்கண்ணபுரம் என்ற தலத்தில் திருமங்கையாழ்வார் பெருமாளிடமே எட்டு எழுத்து மந்திரத்தை உபதேசமாகப் பெற்றார். (ஓம் நமோ நாராயணாய)

32. திருக்கோஷ்டியூர் என்ற தலத்தில் ஸ்ரீ ராமானுஜர் குருவின் கட்டளையை மீறி எட்டெழுத்து மந்திரத்தை உலகத்தவருக்கு உபதேசித்தார்.

33. கதிர்காமத்தில் (இலங்கை) மூலவரை தரிசனம் செய்ய முடியாது. திரைச்சீலை மட்டுமே உண்டு. தவிர இங்கு நதியில் விபூதி கிடைக்கின்றது.

34. குற்றாலத்தில் ஸ்ரீ நடராஜப் பெருமானை சித்திர வடிவில் தரிசிக்கலாம். சித்திரசபை என்று சொல்வர்.

35. மதுரையில் பாண்டிய மன்னனுக்காக சிவபெருமான் கால் மாறி (வலது காலை இடமாக வைத்து) நடனமாடுகிறார்.

36. திருச்சேறை என்ற தலத்தில் கங்கைக்குத் தானும் சமம் என்று காவிரி அன்னை ஸ்ரீ நாராயணனிடம் வரம் பெற்றார்.

37. ஒப்பிலியப்பன் கோவில் என்ற தலத்தில் பெருமாளுக்கு உப்பை பிரசாதத்தில் சேர்ப்பதில்லை.

38. திருவிடைமருதூர் என்ற தலத்தில் மூலவரை தரிசிக்கச் செல்லும்போது ஒரு வழியாகவும், வரும்போது ஒரு வழியாகவும் வரவேண்டும்.

39. திருப்புவனம் என்ற தலத்தில் நரசிம்மரின் கோபம் தணிய சிவபெருமான் சரபேசராக மாறி அடக்கி உள்ளார்.

40. (1) திருவத்திபுரத்திலும் (செய்யாறு) (2) திருவலம் என்ற தலத்திலும்நந்தி, சுவாமியை நோக்கி இல்லாமல் பின்புறமாக திரும்பி உள்ளது.

41. திருத்தணிகையில் ஐராவதம் என்ற யானை சுவாமியை நோக்கி இல்லாமல் பின்புறமாகத் திரும்பி உள்ளது.

42. உத்தரகோச மங்கை என்ற தலத்தில் உள்ள நடராஜருக்கு ஆனித் திருமஞ்சனம், ஆருத்ரா ஆகிய நாட்களில் மட்டும் அபிஷேகம் நடைபெறுகிறது. (சந்தன அலங்காரமும் அப்படியே உள்ளது).

43. காஞ்சி குமரக்கோட்டத்தில் நவக்கிரகங்கள் ஒன்றை ஒன்று பார்த்தபடி அமைக்கப்பட்டுள்ளன. வைதீஸ்வரன் கோயில் என்ற தலத்தில் ஒரே திசையை நோக்கி உள்ளன.

44. கர்நாடக மாநிலம் ஸ்ரீரங்கப் பட்டணத்தில் அனுமான் ஒரு கையில் ராமாயணத்தையும், மற்றொரு கையில் ஸ்ரீராம பாதத்தை தொட்டுக் கொண்டும் உள்ளார்.

45. கும்பகோணம் ஸ்ரீராமஸ்வாமி கோயிலிலும் ஸ்ரீ அனுமன் ஒரு கையில் ராமாயணத்தையும், மற்றொரு கையில் தம்பூராவை மீட்டிய படி ராம பஜனை செய்கிறார்.

46. குமரி மாவட்டத்தில் கேரளபுரம் என்ற தலத்தில் உள்ள வினாயகர் ஆறு மாதம் கருப்பாகவும் ஆறு மாதம் வெண்மையாகவும் காட்சியளிக்கிறார்.

47. தென்திருப்பேரை என்ற தலத்தில் சுவாமிக்கு நேராக கருடாழ்வார் இல்லாமல் வடக்கு புறமாக நகர்ந்து எழுந்தருளியுள்ளார்.

48. மயில் வடிவில் அம்பாள் வழிபட்ட ஸ்தலங்கள், 1. மயிலாப்பூர் 2. மாயூரம்.

49. இரிஞ்ஜாலகுடா (கேரளா) என்ற ஊரில் பரதனுக்கு ஆலயம் உள்ளது.

50. சென்னை நங்கநல்லூரில் முப்பத்தைந்து அடி உயர அனுமன் சிலை தயராகி வருகிறது.





# திருமலையில் தங்கு வசதிகள்

திருமலையில் யாத்திரிகர்கள் இலவசமாகத் தங்குவதற்கு மின்சாரம் மற்றும் தண்ணீர் வசதிகளுடன் கூடிய அறைகள் கொண்ட சத்திரங்கள் உள்ளன. இத்தங்கு வசதிகளைப் பெற திருமலை பேருந்து நிலையத்திற்கு அருகே உள்ள மத்திய வரவேற்பு அலுவலகத்தை அணுகவும். மேலும் யாத்திரிகர்கள் ஓய்வு எடுத்துக் கொள்ளும் வகையில் கொட்டகைகள் மற்றும் கூடங்களும் உண்டு. கட்டணம் செலுத்திப் பெறப்படும் தங்கு வசதிகள் மத்திய வரவேற்பு அலுவலகத்தில் செய்து தரப்படும்.

முன்கூட்டியே தங்கு வசதிகளுக்காக பணம் செலுத்திப் பெயர் பதிவு செய்து கொள்ளும் யாத்திரிகர்கள் தங்கு வசதிகளுக்கான கட்டணத்தை காசோலை (D.D.) மூலம் அல்லது மணியார்டர் மூலம் செலுத்தி அக்காசோலையினை அல்லது எம்.ஓ. ரசீதினை திருமலைக்கு வரும் தேதி, தங்கும் நபர்களின் எண்ணிக்கை, செலுத்திய தொகை ஆகிய விவரங்கள் அடங்கிய கடிதத்துடன் இணைத்து குறைந்தது பத்து நாட்களுக்கு முன்பேயே, உதவி செயலாட்சித் தலைவர் (Asst. Executive Officer) வரவேற்பு I (Reception I) தி.தி.தே. திருமலை-517504 எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும். கடிதப் போக்குவரத்து ஆங்கிலத்தில் இருத்தல் அவசியம்.

## தங்கு வசதிகளுக்கான கட்டண விவரங்கள் :

1) ஹில் வ்யூ பாதிக் குடில்கள், சங்கு மிட்டா, சேஷாத்ரி நகர், அஞ்சனாத்ரி நகர், கருடாத்ரி நகர் குடில்கள்

ஒரு பகுதி (ஹீட்டர் இல்லாதது) ரூ. 15/-

எச்.வி.டி.சி. அறைத்தொகுதிகள் (Suites) (ஒவ்வொன்றும்) ஹீட்டர் உள்ளது ரூ. 25/-

எச். வி. சி. விருந்தினர் விடுதியின் பெரிய அறைத்தொகுதி (ஹீட்டர் உள்ளது) ரூ. 50/-

எச்.வி.சி. விருந்தினர் விடுதியில் சிறிய அறைத்தொகுதி (ஹீட்டர் உள்ளது) ரூ. 25/-

மேற்கூறிய தங்கு வசதிகளுக்கு முன்பதிவு செய்தல் வேண்டும்.

2) மங்களபாவி குடில்கள், டி. பி. இ. மூன்றாவது வரிசை முதலியன

டி. பி. வெளிப்பகுதி குடில்கள் (ஹீட்டர் உள்ளது) ரூ. 60/-

வி.வி.சி., எம்.பி.சி. 31 மற்றும் 26 ரூ. 70/-

எம்.பி.சி. (ஹீட்டர் உள்ளது) ரூ. 50/-

டி.பி., ஏ.டி.சி. அறைத்தொகுதிகள் (ஹீட்டர் உள்ளது) ரூ. 15/-

ஏ. டி. சி. கீழ்த்தளம், முதல் தளம், 'ஏ' 'பி' 'சி' மற்றும் 'டி' பகுதிகள் (ஒவ்வொன்றும்) ரூ. 30/-

ஆர்ஜித சேவை செய்யும் கிருஹஸ்தர்களுக்கு மட்டுமே முன்பதிவு.

3) எஸ். வி. விருந்தினர் விடுதி மற்றும் என். ஜி. ஜி. விடுதயில் உள்ள ஒவ்வொரு அறைத்தொகுதிக்கும் ரூ. 50/-

முன்பதிவு இல்லை.

4) பயணிகள் மாளிகையின் உட்புறக் குடில்கள் ரூ. 70/-

சிறப்பமைப்புக் குடில்கள் ரூ. 100/-

எச். ஆர். ஜீ. குடில்கள் ரூ. 250/-

முன்பதிவு இல்லை. காலியாக இருப்பின் ஒதுக்கப்படும்.

5) ஹில் வ்யூ சொகுசு குடிலில் மோடி பவன்

ஒரு அறைத்தொகுதிக்கு ரூ. 250/-

ஸ்ரீ நிகேதன் விருந்தினர் விடுதி அறைத்தொகுதி ஒவ்வொன்றுக்கும் ரூ. 250/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 750/-

இந்திரா விருந்தினர் விடுதி அறைத்தொகுதி 1க்கு ரூ. 250/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 1000/-

பாலகுடீரம் ஒரு அறைத்தொகுதி ரூ. 250/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 1500/-

ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி அறைத்தொகுதி ஒன்று ரூ. 250/-

முதல் தளத்தில் பெரிய அறைத் தொகுதி மற்றும் கீழ்த்தளத்தில் அறைத்தொகுதி (ஒன்று) ரூ. 750/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 2500/-

கோகுலம் விருந்தினர் விடுதி (குளிர்ச் சாதனம் பொருத்தப்பட்டது) அறைத்தொகுதி (ஒன்று) ரூ. 500-/

ஸ்ரீநிவாசா நிலையம் அறைத்தொகுதி (ஒன்று) ரூ. 500/-

ஸ்ரீநிவாசா நிலையம்
விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 2500/-

வித்யா சதன்
பெரிய அறைத் தொகுதி ரூ. 750/-
,, மற்றைய அறைத்தொகுதி ரூ. 500/-

கோதாவரி சதன்
அறைத்தொகுதி ஒன்று ரூ. 250/-
,, விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 750/-

காம்பெல் விருந்தினர் விடுதி
அறைத்தொகுதி ஒன்று ரூ. 250/-
,, விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 1000/-

முன்பதிவு கிடையாது. காலியாகும் தங்கு வசதிகளைப் பொறுத்து ஒதுக்கப்படும்.

தயைகூர்ந்து "உதவி செயலாட்சித் தலைவர், (வரவேற்பு) தி. தி. தே., திருமலை" எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

6) திருமணக் கூடங்கள் :

சங்குமிட்டா குடில்கள் கிழக்கு
எண். 272, 260, 266, 267 ரூ. 100/-

டி.பி. குடில் எண். 71 வரிசை III
எண்கள் 136 மற்றும் 152 ரூ. 100/-

ரூயா குடில், கோகினேனி குடில்
மற்றும் ஏ.டி.சி. எண். 99 ரூ. 100/-

சிதம்பரம் செட்டியார் குடில் ரூ. 100/-

ஸ்ரீ சீதாராம திருமண மண்டபம் ரூ. 1000/-

முன்பதிவுக்கு உதவி செயலாட்சித் தலைவர், (ஆர்). தி. தி. தேவஸ்தானம், திருமலை எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

ராம் பகீச்சா விருந்தினர் விடுதி
சேஷாத்ரிநகர் விருந்தினர் விடுதி ரூ. 50/-
(அறைத் தொகுதி ஒன்றிற்கு)

விதிகள் :-
* ஒரு நாள் என்பது இடவசதி வழங்கப்படும் நேரத்திலிருந்து 24 மணி நேரங்கள்.
* தேவைப்படும் இடவசதி வழங்கப்பட முடியாவிட்டால் வேறு தங்கு வசதி செய்து தரப்படும். இதனால் செலுத்தப்பட்ட தொகை அதிகமாக இருப்பின் வித்தியாசப்படும் தொகை திருப்பித் தரப்படும்.
* கூட்டம் அதிகமாக இருக்கும் நிலைகளில், தங்கு வசதி ஒருநாளைக்கு மட்டுமே வழங்கப்படும்.
* ஒதுக்கப்பட்ட கால நேரத்திற்கு மேலாக தங்கு வசதிகளைப் பயன்படுத்தினால், நிர்ணயிக்கப் பட்ட தொகையினைப் போல் மூன்று மடங்கு தொகை அபராதமாக வசூலிக்கப்படும்.
* மேலே குறிப்பிட்டுள்ள கட்டணங்களும், கால நேரங்களும் மாற்றக்கூடியன.

# திருப்பதியில் தங்கு வசதிகள்

## இலவச தங்கு வசதிகள் :

திருப்பதி இரயில் நிலையத்திற்கு வடக்குப் புறத்தில் உள்ள ஸ்ரீகோவிந்தராஜ தர்மசாலை மற்றும் ஸ்ரீ கோதண்டராம தர்மசாலைகளில் மேஜை, நாற்காலி வசதி இல்லாத ஆனால் சமையல் செய்து கொள்ளும் வசதிகளுடன கூடிய இட வசதிகள் உள்ளன. யாத்திரிகர்கள் இவ் இடவசதிகளுக்காக தர்மசாலையில் உள்ள மத்திய வரவேற்பு அலுவலகத்தின் கண்காணிப்பாளரை அணுகவும். தொலைபேசி எண். 20991

## மேஜை, நாற்காலிகளுடன் கூடிய இடவசதிகள் :

ஸ்ரீ வேங்கடேஸ்வரா தர்மசாலை (இரயில் நிலையத்திற்கு எதிரில்)

சிறியது ரூ. 2/- பெரியது ரூ. 30/- நான்கு படுக்கைகளைக் கொண்டது ரூ. 40/-
கண்காணிப்பாளரை அணுகவும் தொலைபேசி எண். 20103.

இரயில் நிலையத்திற்கு வடக்குப்புறம் உள்ள ஸ்ரீ வேங்கடேஸ்வரா விருந்தினர் விடுதி :
அறைத்தொகுதி ஒன்று ரூ. 30/-

'உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு) திருப்பதி' எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும். தொலைபேசி எண். 20166.

ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி (குளிர்ச்சாதன வசதியுடன் கூடியது) (சித்தூர் சாலையில் உள்ளது)
பெரிய அறைத் தொகுதி ரூ. 65/- : சிறிய அறைத் தொகுதி ரூ. 40/-
திருப்பதியிலுள்ள உதவி செயலாட்சித் தலைவரை (வரவேற்பு) அணுகவும். தொலைபேசி எண். 20103.



# திருமலையின் ஏற்றம்

கலியில் கண்கண்ட தெய்வமாய் திருமலையில் வாழும் வேங்கடவன் விளங்கி வருகிறான். அவன் பெருமையை ஆழ்வார்களும், ஆச்சார்யர்களும் மற்றும் பல பெரியோர்களும், மஹான்களும் பற்பலபடியாக அநுபவித்து இருக்கிறார்கள். அதில் முதலாவதாகத் திகழ்பவர் நம் குலசேகரன் ஆவார். இவர்தம் பிரபந்தங்கள் மிகவும் எளிமையாகவும், ரஸமாகவும்அமைந்திருப்பதைக் கற்றவர் அறிவர். தம் பிரபந்தமான பெருமாள் திருமொழியில் "ஊனேரு செல்வத்து" என்று ஆரம்பித்து பதினோரு பாசுரங்கள் வேங்கடவன் வாழும் திருமலையின் ஏற்றத்தை மிக அழகாகச் சொல்லியிருக்கிறார். வேங்கடவனின் திருவடியின் சம்பந்தத்தால் இம்மலையும் ஏற்றம் உடையதே என்பது ஆழ்வாரின் திரு உள்ளம். பூவினால் நாரும் மணம்தரும் என்பது பழமொழி. அதுபோல எம் பெருமான் சம்பந்தப்பட்ட அனைத்தும் ஏற்றமானது அடியார்களுக்கு.

'ஏ, வேங்கடவா! உன் திருமலையில் ஏதாவது ஓர் பிறவியைக் கொடுத்து என்னை வாழவை அப்பா. ஏதாவது ஒரு விதத்தில் உன் திருவடியின் சம்பந்தம் இருந்தால் போதுமானது. இப்பிறவியை வளர்க்கக் கூடிய, ஊனைப்பெருக்கக்கூடிய செல்வங்கள் எனக்கு வேண்டாமப்பா. ஏழு எருதுகளைக் கொன்று நப்பின்னையை மணந்து கொண்ட உனக்குத் தொண்டு செய்வதே என் நோக்கம். சங்கு சக்கரங்களைக் கையில் தரித்து அன்பர்களின்உள்ளத்தைக்கொள்ளை கொள்ளும் உன்னைத் தாங்கி நிற்

அடியார்க்கடியவன்

கேத்தாண்டபட்டி.

## தி. தி. தேவஸ்தான சமய நூல்கள்

### தமிழ்

| | | ரூ. காசு. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் (அச்சில்) (ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களா சாஸனங்களுடன்) | 0—50 |
| 2. | ஏழுமலை யாத்திரை — திரு. டி. கே. நாராயணன் | 0—75 |
| 3. | அன்னமய்யா ஓர் அறிமுகம் டாக்டர். பொன். சௌரிராஜன் டாக்டர். கே. சர்வோத்தமன் | 1—00 |
| 4. | பகவத் சந்தேசம் (தமிழாக்கம்) டாக்டர். பொன் சௌரிராஜன் | 0—50 |
| 5. | இந்து சமயக் கையேடு (தமிழாக்கம்) அ. நடராஜன் | 1—50 |
| 6. | நித்யாநுஸந்தானம் (வடகலை) | 4—00 |
| | நித்யாநுஸந்தானம் (தென்கலை) | 4—50 |
| 8. | கண்ணன் பேசுகிறான் —நஜன் | 0—50 |
| 9. | சுவாமி பட்டினத்தார் டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு | 1—00 |
| 10. | முக்கவி கண்ட காப்பியம் — டாக்டர். டி. ஜி. அனந்த சுப்ரமண்யம் | 12—00 |
| 11. | திருப்பாவை (அச்சில்) | |

### சம்ஸ்கிருதம்

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேஸ்வரா அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம் | 0—62 |
| 2. | அலங்கார ஸங்க்ரஹம் —சி. கே. பாஸ்கரராவ் | 16—00 |
| 3. | கடோபநிஷத் —டாக்டர். கே. சி. வரதாசாரியார் —டாக்டர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4. | க்ரியாதிகாரா — தொகுத்தவர்: டாக்டர். எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. | மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. | ப்ரஸ்னோபநிஷத் | 11—00 |
| 7. | ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | 0—12 |
| 8. | சீதாராமாஞ்சநேயம் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி | 50—00 |
| 9. | தத்வ சாங்க்யானம் —திரு. ஆர். ராமமூர்த்தி சர்மா | 2—00 |
| 10. | பிரம்மசூத்ர பாஷ்யம்-தொகுதி - 1 திரு. —ஆர். ராமமூர்த்தி சர்மா | 30—00 |

மேற்படி நூல்களுக்கான தொகையை வங்கி டி. டி. அல்லது எம். ஒ. மூலமாக அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம். வி. பி. பி. மூலமாக நூல்கள் அனுப்புதல் இயலாது. நூல்களுக்கு "மக்கள் தொடர்பு அலுவலர், நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

கும் இந்த மலையில் ஒரு கொக்காக வாழும் பாக்கியத்தை எனக்குக் கொடுப்பாய். நிம்மதியாய் உன் மலையில் வாழ்ந்து வருவேன்' என்கிறார் ஆழ்வார்.

குருகாய் பிறவி கேட்ட ஆழ்வார் யோசனை செய்த போது அதில்இருக்கும் ஆபத்து புரியவந்தது. நீர் நிலைகளை நாடிச் செல்வதே பறவைகளின் போக்கு. அங்குதான் அவற்றிற்குத் தேவையான ஆகாரங்கள் கிடைக்கும். மலையில் இருக்கும் அருவிகளும், தடாகங்களும் எப்பொழுதும் நிரம்பி வழியும் என்று யார் கண்டது. தனக்கு அங்கு ஆகாரம் கிடைக்கவில்லை என்றால் வேறு இடத்தை அல்லவா அது நாடிச்செல்லும். மற்றும் காட்டில் ஏற்படும் பல சப்தங்களால் நிம்மதியாக வாழவும் முடியாது. ஆகவே இப்பிறவி வேண்டாம் என்று முடிவு செய்கிறார் ஆழ்வார். மேலும் ஏழுமலையானைப் பார்த்து 'பெரியதொரு செல்வத்தில் மூழ்கித் திளைக்கவும், ஊர்வசி, ரம்பை போன்றவர்களால் சூழப்பட்டுச்சிற்றின்பத்தில் மூழ்கவும் இந்நாட்டை ஆளக்கூடிய செங்கோலும் எனக்கு வேண்டாமப்பா. திருமலையில் இருக்கக்கூடிய பல சுனைகளில் ஒரு மீனாய் இருக்க அருள்புரி'' என்கிறார் ஆழ்வார். தண்ணீரில் நிம்மதியாய் வாழலாம் என்ற எண்ணம் ஆழ்வாருக்கு.

மீன் உருவம் கேட்ட ஆழ்வார் சற்று சிந்திக்கிறார். ஆகா இப்பொழுதும் அல்லவா ஏமாந்து விட்டோம். மேலேசொன்ன கதைதானே மீனுக்கும். மழையில்லா விட்டால் வறட்சியினால் சுனைகள் வற்றி அல்லவா போய்விடும். ஆக மீனும் உயிரை விடநேரிடுமே. மேலும் மனிதர்கள் வேறு தங்கள் ஆகாரத்திற்காகப் பிடித்துப் போய்விடுவார்கள். ஆக, இதிலும் பல ஆபத்துக்கள் சூழ்ந்துள்ளது. என்ன செய்வது.' யோசனையில் ஆழ்கிறார் ஆழ்வார்.

ஒரு யோசனை தோன்றுகிறது. ஆம இதுதான் நல்லது. இதில் ஒரு ஆபத்தும் கிடையாது என்று நினைத் தார்.

'ஏ, மாதவா! உன்னைப் பார்க்க சடையப்பனும், நான்முகனும், தேவேந்திரனும் மற்றும் பல பக்தர் களும் இந்த பெரியதான வைகுந்த வாசலிலே (கோபுர வாயிலிலே) இடை விடாது வந்த வண்ணம் காத்துக் கிடக்கின்றனர். அவர்களுக்கே உள்ள செல்ல தாராளமாக அனுமதிகிடைக் காதபோது என்போன்றவர்கள் எப்படிச் செல்வது. நீ ராஜாதி ராஜன் ஆனபடியாலே உன் பக்கத் தில் உனக்கு கைங்கர்யம் செய்ய பல பேர் வருகிறார்கள். அதில் நானும் கலந்து கொள்ள ஸ்தானீகம் செய் யும் பாக்கியத்தைக் கொடு அப்பா. அது நீ உமிழும் எச்சில் (வெற்றிலைப் பாக்கு நீரை) ஏந்த ஒரு வட்டிலுடன் நான் அங்கு இருக்க ஆசைப்படு கிறேன். வட்டில் கையில் எடுத்துப் போனாலே போதுமானது. கைங்கர்ய பரர்கள் கோஷ்டியில் சேர்ந்தவன் ஆனபடியினாலே போதுமானது. கைங்கர்யபரர்கள் எப்பொழுதும் உள்ளே வர அனுமதி உண்டு. வட்டிலுடன் செல்லும் என்னைத் தடுப்பார் யாரும் கிடையாது. ஆக இக்கைங்கர்யத்தை எனக்குக் கொடுத்து ஆதரிப்பாய் தாமோதரா! பாற்கடலில் பள்ளிகொள்ளும் பரமா! உன் திருவடிகளை எப்பொழு தும் மறக்காமல் இருக்க துணைசெய் யப்பா' என்கிறார். மேலே சொன்ன பரிசாரக தொண்டிலும் பல அல்லல் கள் இருப்பதைக் கண்ணுற்றார் ஆழ் வார். 'மறுபடியும் யோசனை செய் யாமல் கேட்டுவிட்டோமே. இதிலுமல் லவா பல இன்னல்கள் இருக்கின்றன. அதிகாரிகள் இஷ்டத்திற்கு அல்லவா நடக்கவேண்டிவரும். இங்கே போ, அங்கே போ என்று நம் காரியம் அல் லாததையும் அவர்கள் சொன்னால் செய்யவேண்டிவரும். செய்யாவிட் டாலும் மனவருத்தம் உண்டா கவும வாயபபு ுருக்கிறது. அத னால் வேலையையும் இழக்க நேரிட லாம். மற்றும் பொன்வட்டில் ஆன படியாலே அதையே களவாடி எடுத்துக்கொண்டு செல்லவும் எண் ணம் தோன்றலாம். இதில் ஒன்றும் வியப்பில்லை. முற்றும் துறந்தவர் களுக்குக் கூட மணி, பொன், பெண் ஆசை விடவில்லை என்று பெரியோர் கள் சொல்வதுண்டு. ஆக இதுவும் வேண்டாமப்பா பயமாக இருக்கிறது' என்கிறார் ஆழ்வார்.

'ஆகையினால் திருபாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் எம்பெரு மானே! உன் திருவடிகளை எனக்குக் காட்டி அருள்வாய். உன் மலையில் இருக்கும் சோலைகளிலே வண்டுகள் ஸப்தமிடுவது, உன்னைப் பாடுவது போலல்லவா இருக்கிறது. அப்படிப் பட்ட சோலைகளிலேஇருக்கும் (செடி கொடிகள்) பல புஷ்பங்களில் செண் பகப்பூவாகஇருக்கும் ஒருவாய்ப்பைக் கொடுத்தால்எப்பொழுதும் உனக்குச் சாத்தப்பட்டு உன் திருமேனி சம்பந் தம் இடைவிடாமலிருக்க அருள் புரி வாய், வேங்கடவா' என்கிறார் ஆழ் வார்.

இப்படி செண்பகப் பூவாக இருக்க நினைத்த ஆழ்வாருக்கு அதுவும் சரிபடவில்லை. காரணம், செண் பகப்பூ மிகவும் வாசனையுடையது. ஆக எம்பெருமானுக்கு சாத்திவிட் டால் நமக்கு இவ்வளவு வாசமுள்ள மலரானது கிடைக்காது என்ற எண் ணத்தில் அதிகாரிகள் கோயிலுக்குள் அனுமதிக்காமல் நேராக தங்கள் இல் லத்திற்கு எடுத்துச் செல்லும் அபாய மும் உண்டு. ஆகவே இதுவும் வேண் டாமப்பா. பெரிய யானையின் மீது அமரும் பாக்யத்தைக் கொடுத்து நாலுவிதமான சுகங்களைப் பொருந்தி அனுபவிக்கும்படியான ஐச்வர்யத்தையும், இந்த ராஜ்யத்தை யும் ஆளும்படி கொடுத்தாலும் அதுஎனக்கு வேண்டாமப்பா.

உன்னுடைய ஏழுமலைகளில் ஏதா வது ஒன்றில் தூணாக இருக்க அருள் செய்து விட்டால் காலமெல்லாம் ஆடாது அசையாது அங்கேயே கிடப் பேன். மலையிலிருந்து ஒருவரும் என்னை எடுத்துப் போக முடியாது, என்று கேட்கிறார் ஆழ்வார், தூணாக கேட்ட ஆழ்வாருக்கு அதிலுள்ள தொல்லைகளும் புரி கிறது. தூணாக இருக்கும் ஒரு மண்டபத்தைக் கண்ட அதிகாரி 'இவையெல்லாம் பழைய காலக் கட்டி டங்கள். இவைகளை அப்புறப் படுத்திவிட்டு தூணே இல்லாமல் புது முறையில் கட்டிவிடுங்கள்' என்றும் 'தூண் தேவையற்றது' என்றும் சொல்லிவிடுகிறார். அப்பொழுது தூணாக இருக்கும் நம் கதி என்ன என்று நினைத்து மேலே என்ன வென்று கேட்பது என்று யோசிக் கிறார் ஆழ்வார்.

'ஆஹா! இப்படிக் கேட்டால் என்ன! தேவமங்கைகளான ஊர்வசி, அரம்பை, மேனகை இவர்களே வந்து ஆடல் பாடல்களை நடத்துவதாக இருந்தா லும் அவற்றை நான் ரஸிக்கமாட் டேன். அதை நான் ஆதரிக்கவும் மாட்டேன். வண்டுகளின் ரீங்கார சப்தங்கள் நிறைந்து கிடக்கும் இந்த வேங்கடமலை வாழ்வே எனக்குத் தேவை. இம்மலைகளில் ஏதாவது ஒன்றின் சிகரமாக இருக்க அருள் செய்வாய். அதுவே போதும்' என் கிறார். மலை சிகரமாக இருந்தால் ஆபத்து ஏதுவுமில்லை என்று நினைத்த ஆழ்வாருக்கு பார்க்கும் இடங்களில் மலையின் சிகரங்களை மட்டமாக்கிக் கண்களுக்கு எட்டும் வரை பாதையாக மாறியிருப்பது தெரியவருகிறது. சிகரமாக இருந் தால் தனக்கும் அக்கதிதானே. மேடு பள்ளங்களை நிரப்ப சிகரங்கள் உடைக்கப்பட்டுப் பயன்படுகின்றன. இனி எதைக் கேட்பது என்று ஆழ் வார் மீண்டும் சிந்தனை செய்கிறார்.

"ஏக சக்ராதிபதியாக ஒரே குடை யின்கீழ் ஒரே நாயகனாய் வீற்றிருந்து

செங்கோல் செலுத்தும் அதிகாரம் வேண்டாம். தேனாறுகள் பெருகிக் கொண்டிருக்கும் பூஞ்சோலைகளை உடைய இவ்வேங்கடமலைமேல் எப்பொழுதும் வற்றாமல் இருக்கக் கூடிய நதியாகிய ஓர் உருவம் கொடு அப்பா. இதிலேயாவது நிம்மதியாக இருக்க முடிகிறதா பார்க்கிறேன்'' என்கிறார். இதிலேயும் நிம்மதி தென்படவில்லை ஆழ்வாருக்கு. மேல் சொன்ன சுனையின் கதியே இதற்கும் ஆகிவிட்டால் என்ன செய்வது? பல வருஷங்கள் மழை பெய்யாவிட்டால் ஆறும் அல்லவா உலர்ந்துவிடும். எனவே ஆழ்வாருக்கு இதிலும் திருப்தி இல்லை.

''ஏ, பரவாஸுதேவா! வெண் பிறையை தலையில் தரித்த ஈசனும் பிரம்மனும், இந்திரனும் நாள்தோறும் முறை தவறாமல் செய்து வரும் வேள்வி, யக்ஞம் பல செய்து உன்னைக்காண, அதனால் திருப்தி அடைந்த நீ அவர்களுக்கு ஸேவை தருகிறாய். அப்படிப்பட்ட வேத புருஷனான நீ இருக்கும் திருமலையில் ஓர் புதராக இருக்க அருள்புரிவாய்' என்றுவேண்டுகிறார் ஆழ்வார். மறுபடியும், மறுபடியும் யோசனை செய்யாமலேயே கேட்டுவருகிறோமே என்று ஆழ்வாருக்கு ஓர் எண்ணம் தோன்றிற்று. ஒன்றுக்கும் உதவாத செடியாக அல்லவா நான் கேட்டுவிடுகிறேன். இதற்கும் மழை தேவை. மேலும் போகும் வழியில் தொந்தரவு தருவதாக எண்ணி வெட்டியும் எரிந்து விடலாம். இதிலும் ஆபத்து உள்ளது. மேற்கொண்டு என்னசெய்வது என்று எண்ணி தியானத்தில் ஆழ்கிறார் ஆழ்வார்.

திடீரென அவர் முகத்தில் ஆனந்தக்களிப்பு ஏற்படுகிறது. ''ஆஹா! இதை முதலிலேயே கேட்டு இருக்கலாமே. ஏ, திருமாலே, பல கொடிய நோய்களைத் தீர்க்கக் கூடியவன் நீ. அதிலும் பிறவிஎன்னும்நோயை வேருடன் களையக் கூடியவன் நீஒருவனே. ஏ, திருவிக்கிரமா! வேங்கடவா! உன் கோயிலின் வாயிலில் அடியார்களும் தொண்டர்களும், மற்றும் மேலுலக வாசிகளான தேவர்களும் வந்து சேவிக்கும்படியான மூலஸ்தானத்தில் அடியேன் ஒரு படிக்கல்லாக இருந்துவிட்டால் எப்பொழுதும் இடைவிடாமல், உன் திருவடித்தாமரைகளையும் உன் பவழச்செவ்வாயையும் சதாஸர்வ காலமும் ஸேவித்த வண்ணம் இருக்கலாம் அல்லவா. இதில் யாருக்கும் எந்த கஷ்ட நஷ்டம் இருக்காது. படிக்கட்டாக இருக்கும் என்னை யாரும் ஒன்றும் செய்யவும் முடியாது. இதை அருள்வாய் அப்பனே' என்று கூறி மன நிம்மதி அடைந்தார்.

நிம்மதி வெகு நாழிகை நீடிக்கவில்லை, ஆழ்வாருக்கு 'வாயிலிலிருந்து உள்வரை போட்டு இருக்கும் படிக்கட்டுகளைப் பார்த்தும், நாம் ஏன் இப்படிக் கேட்டோம். ஒவ்வொரு படியையும் வரும் பக்தர்கள் தங்களின் பிரார்த்தனையின் பேரில் வசதிக்கு ஏற்ப வெள்ளி, செப்பு, பொன் தகடுகளால் மூடி மறைத்தும் விடுகிறார்கள். இக்கதி தான் நமக்கும் நேரும். பொன் பொருள் வேண்டாம் என்று ஒதுக்கி தள்ளி விட்டு வந்த நம்மை மறுபடியும் அந்தப் பொன்னினாலேயே மறைத்துவிடுவார்கள். உள்ளேயே கிடந்து வெம்பி அழிவதே நம்நிலை. அவனை எப்படிக் கண்குளிர ஸேவிப்பது. அதற்காகவோ இப்பாடுபட்டோம். வேண்டாம், வேண்டவே வேண்டாம் இந்நிலை.'

'மதுசூதனா! ஏதேதோ இதுவரை கேட்டுவந்தேன். ஒன்றிலும் என் மனம் நிம்மதி அடையவில்லை. நான் கேட்ட அனைத்தும் அழியக்கூடியதாக இருக்கிறபடியால் நீயே தயை கூர்ந்து எது எனக்கு ஏற்றது என தீர்மானித்து உன் திருவடிவாரத்தில் இருந்துக் கொண்டு உன் திருப்பவள வாயினைக் கண்டு கொண்டே வாழும் எப் பிறவியையாவது இத்திருமலையில் கொடுத்து அருள வேணடும், என்று கலியுக வரதனாய் கோவிந்தனை ஆழ்வார் சரணடைகிறார். பாசுரம் பார்ப்போம் :

'' உம்பருலகாண்டொரு குடைக்கீழ்
உருப்பசிதன்
அம்பொற்கலையல்குல் பெற்றாலு
மாதரியேன்,
செம்பவள வாயான் திருவேங்கட
மென்னும்
எம்பெருமான பொன்மலைமேலே
தேனுமாவேனே ''
—பெருமாள் திருமொழி 4—10

இக்குலசேகரனால் இயற்றப்பட்ட திருமலையின் ஏற்றமான இப்பத்து பாசுரங்களையும் கேட்பவர்கள் சொல்லுபவர்கள் எம்பெருமானுக்கு உகந்த பக்தர்களாவார்கள் என்ற பலனைச் சொல்லி 11ம் பாசுரத்தை தலைக்கட்டுகிறார் ஆழ்வார். இவைகளின் மூலம் திருமலையின் ஏறறம் நன்கு தெரிகிறது. இம்மலையின் ஏற்றம் எம்பெருமான் எழுந்தருளியிருப்பதாலா? அல்லது ஆழ்வாரின் பாடல் பெற்றதாலா? யோசனைக் குறிய விஷயமல்லவா? என்னே குலசேகரனின் ஈடுபாடு!



# பிறப்பும் சிறப்பும்

பொங்கிடும் பொலிவோடு புத்தாண்டு வாழ்த்துக்களை உங்களுக்கு உரிமையோடு பகிர்வதில் உளம் மகிழ்கிறது ஆண்டெல்லாம் புத்தாண்டே. நாமோ நமது அல்லது நம் குழந்தைகளின் பிறந்த நாளையும் ஆண்டு தோறும் கொண்டாடி மகிழ்கிறோம். இப்புத்தாண்டு பிறப்பிலும், நம்முடைய பிறப்பிலும் பொதிந்திருக்கும் உண்மையான விளக்கங்களை நம்மில் எவ்வளவு பேர்கள் அறிந்திருப்பார்கள் என்று ஆய்வு நடத்துவோமேயானால் கிடைக்கும் விடை விகிதங்கள் குறைவே என்பது மட்டும் தெளிவு. மனிதராகிய நாம் மட்டுமா பிறக்கின்றோம். எண்பத்து நான்கு லட்சம் யோனி பேதங்களின் வழியே பல உயிரினங்கள் பிறக்கின்றன. ஆனால் சிந்திக்கும் மனத்தைப் பெற்றதினால் மனிதன் என்று அழைக்கப்படுகிறோம். ஆறறிவு பெற்றதினால் மனிதப் பிறவி சிறப்புடையது என்றும் பகர்வர்.

சிறப்புடைய பிறவி பெற்றதனால் சிந்திப்பது அவசியமே. பிறப்பது, உண்பது, உறங்குவது, இறப்பது இவை மட்டும் மனிதனுக்கு இருப்பின் போதுமானதாகாது. பிற உயிரினங்கள் கூடத்தான் உண்கின்றன, உறங்குகின்றன இறுதியில் இறந்துபடுகின்றன. அப்படி இருக்கும்போது "அரிது அரிது மானிடராய் பிறத்தல் அரிது" என்று ஔவை மூதாட்டி ஏன் பகர வேண்டும் என்று சிந்தித்து விடை காண்பதே நாம் பெற்ற இப்பிறப்பின் பெரும் பயன் ஆகும். பிறப்பு என்பது எல்லாருக்கும் பொதுவானது. ஆனால் இப்படித்தான் பிறக்க வேண்டும் என்பது மட்டும் இறைவன தீர்ப்பு ஆகும். அதனால் தான் அவனன்றி அணுவும் அசையாது என்றும் எண்ணற்ற உருவங்களை உயிர் தாங்க வேண்டியுள்ளது என்பதையும் மணிவாசகப் பெருந்தகை விளக்குகிறார்.

"புல்லாகிப் பூடாகிப் புழுவாகி மரமாகி
பல்விருகம் ஆகிப் பறவையாய்
பாம்பாய்
கல்லாய் மனிதராய் பேயாய்
கணங்களாய்
வல்ல சுரராய் முனிவராய் தேவராய்
செல்லா நின்ற இத்தாவர சங்கமத்துள்
எல்லா பிறப்பும் பிறந்திளைத்தேன்
எம்பெருமானே"

(சிவ புராணம்)

ஒவ்வொரு முறையும் பிரிந்த உயிர் எடுக்கும் உருவம் எதுவோ அறியேன் எம்பெருமானே என்று அலறுகிறார் இப்பிறப்புக்களில் உயர்ந்தது மானிடப் பிறப்பு. அம்மானிடப் பிறப்பும் வேண்டாம், பிறவாமை ஒன்றே வேண்டும் என்று ஞானிகள் புலப்படுத்துவர். இப்பிறவாமையை பெறுவதற்கு பிறந்துவிட்ட நமது எண்ணங்களும் செயல்களும்தான் அடிப்படை ஆகும் என்பதைப் புரிந்து கொள்ளுதல் அவசியம். பாவம் இரும்பு விலங்கானால், புண்ணியம் பொன் விலங்கு ஆகும். இரண்டினாலும் பிறப்பெய்த வாய்ப்புண்டு.

இவ்வளவு பெரிய உருவத்துக்குக் காரணமான மூலப்பொருள் கருவில் சேரும் அளவு எவ்வளவு எனில் பனிக் காலத்தில் ஒரு புல்லின் நுனியில் எவ்வளவு பனிபடர்ந்து இருக்குமோ அவ்வளவே ஆகும் என்பதை மெய்ப்பிக்கிறார் அருணகிரிப் பெருமான்.

"அறுகுநுனி பனியனைய சிறியதுளி
பெரியதொரு
ஆகமாதியோர் பாலரூபமாய்"

(திருப்புகழ்)

பனித்துளி அளவே படர்ந்த கருவில் இருந்து பிறந்து வளர்ந்து இவ்வளவு பெரிய மனிதராய் வளர்ந்த நாம் அடிப்படை வளர்ச்சியின் காரணத்தை அறிந்தோம் இல்லை. இம் மண்ணில் நமக்கு இறைவன் ஏவிய கடமை இன்னதென உணர்ந்தோம் இல்லை, உணர்ந்து நடந்தோம் இல்லை. மாறாக உலக மாயைக்கும், காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சர்யம் என்னும் கவசங்களால் மறைக்கப்பட்டு விடும் காரணமே மீண்டும் பிறக்க வழி செய்கிறது. காமம் என்பதற்கு ஆசை என்பதும் ஒரு பொருள். தயரதர் இராமபிரான்மீது வைத்தது ஆசை. கோசலை மகன்மீது வைத்தது அன்பு. ஆசை வைத்த தயரதர் மாண்டார். குரோதத்தால் சிசுபாலன் மாண்டான். உலோப குணத்தால் தாடகையும், துரியோதனனும் மாண்டனர். மோகத்தால் இராவணன் மாண்டான். மதத்தால் சூரபத்மன் அழிந்தான். மாச்சர்யத்தால் அழிந்தவன் கம்சன். இவர்களும் பிறந்தார்கள் தகாத செய்கையால் மாண்டனர். மனிதனது எண்ணமும் செயலும் பல பிறவிகளைக் கொடுக்க வல்லது என்பதை கீழ்வரும் செயல்கள் விளக்கும்.

கவிஞர். சோமசுந்தரப் பெருமான்,
தங்கவயல்.

திருக்கயிலை மலையில் சிவபெருமான் தொண்டரான ஆலால சுந்தரர்

மலர் கொய்யப் பூந்தோட்டம் சென்றார். அங்கு உமாதேவியரின் தோழிகளான அநிந்திதை, கமலினி என்ற பெண்களைப் பார்த்து ஒரு கணம் சிந்தை பறிகொடுத்த காரணத்திற்காக அவர் பூலோகத்தில் சுந்தரர் ஆக பிறக்க நேர்ந்தது. சிற்றரசர்கள் ஆட்சிசெய்யும் இருநாடுகள்அண்டை நாடுகளாக இருந்தன. இருவரும் பகையரசர்கள் ஆனார்கள். சங்கமன் என்ற வியாபாரி ஒருவன் அண்டை நாட்டிற்கு வியாபாரம் செய்ய சென்றான். அந்நாட்டில் உள்ள பரதன் என்பவன் சங்கமனை அணடைநாட்டு அரசன் அனுப்பிய ஒற்றன் என்றுதன் நாட்டு மன்னனிடம் கூறி அவனைக் கொலை புரிவித்தான். சங்கமன் மனைவி நீலி கற்புடையவள். 14 ஆண்டுகள் துயருற்று இக்கொடுமை புரிந்தோர் இதே துன்பத்தை அடைவார்களாக என்று சாபமிட்டு மலை மீதிருந்து வீழ்ந்து இறந்தாள். அச்சங்கமனே மறு பிறப்பில் பொற்கொல்லனாகவும், பரதன் கோவலனாகவும் பிறந்து அதே கதியை அடைந்தனர்.

இமய மலைக்காட்டில் ஆகுகன், ஆகுதி என்ற வேடர் தம்பதியர் இருந்தனர். உத்தம குணம் நிறைந்த அவர்களிடம் ஒரு நாள் ஒரு தவசீலர் வந்தார். இரவு நேரத்தில் வந்த அத்தவச் சீலரை வரவேற்று உணவளித்து உபசரித்து தம்பதியர் மகிழ்ந்தனர். இருவர் மட்டுமே உறங்க முடிகின்ற அக்குகையில் வேடன தன மனைவியையும் தவச சீலரையும குகையினுள் படுகக வைத்து கதவைப பூட்டி வெளியே வில்லுடன் வேடன் நின்றான்.

இரவில் சிறிது கணணயர்ந்த நேரத்தில், வந்த சிங்கமானது வேடனைக் கொன்று புசித்துச் சென்றது. அதிகாலையில் வாயில் திறந்து வெளியே வந்து பார்த்த வேடன் மனைவி ஆகுதி கதறி அழுது சிதைந்த கணவன்மீது வீழ்ந்தாள் அவள் ஆவி



டி. என், ராமசந்திரராவ்,
8-ஆம் வகுப்பு, கேஜெக்ஸ் பள்ளி, திருப்பதி,

பிரிந்தது. இத்துயரைக் கண்ட தவச்சீலர் மிக்குச் சோகமுற்றுக் காட்டில் சுள்ளிகளைப்பொறுக்கி அவ்விரு பிணங்களையும் எரித்தார். எரியும் போது இவ்அநுமைத் தம்பதிகள் மாள தானே காரணம் என்று கருதி அவரும் நெருப்பில் வீழ்ந்து மாண்டார். மறுபிறப்பில் அவ்வேடர் தம்பதிகள் நளன் தமயந்தியாகவும் தவச்சீலர் அன்னமாகவும்பிறந்து அத் தம்பதியரை சேர்த்து வைத்தார்.

ஒரு முனிவரது மகன் தன்னை நாடி வந்த ஒருவருக்குப் பரிகாரமாக முருகன் நாமத்தை மூன்று முறை உச்சரித்துப் பயன்பெறும்படிக் கூறி அனுப்பினான். அவன் சென்றபின் முனிவர் வந்தார். அங்கிருந்த தடயங்களைக் கண்டு மகனிடம் வினவ மகன் நடந்ததைக் கூற முனிவர் 'முருகன் நாமத்தை ஒரு முறை உச்சரித்தாலே போதும். நீ மூன்று முறை உச்சரிக்கச் சொன்னது தவறு. எனவே இப்பாவத்திற்காக நீ கங்கைக் கரையில்வேடனாக பிறப்பாய்' என்று சபித்தார் முனிவர். அந்த கங்கை வேடன்தான் குகனாக அவதரித்து இராமபிரானைக் கட்டித் தழுவ முடிந்தது.

சிவபெருமானிடம் பாசுபதாசுரம் பெறுவதற்காகத் தவமேற்கொண்ட அருச்சுனனைக் கொல்ல துரியோதனின் ஏவலினால் முகாசுரன் என்பவன் பன்றி வடிவிலே வருகிறான். அருச்சுனனைக் காக்கும் பொருட்டு பெருமானே வேடனாக வந்து பன்றியைக்கொன்று அருள்புரிகிறார். அதன்பின் நடந்த வாக்கு வாதத்தில் அருச்சுனன் சிவபெருமானை அறியாது வேடனே என்று கூறிய காரணத்தினால் மறுபிறப்பில் அருச்சுனன் காளத்தி வேடன் கண்ணப்பராகப் பிறந்து சிறப்படைந்தான.

காளி கோவில் பூசாரி ஒருவன் காளிக்கு இரண்டு ஆட்டுக் குட்டிகளைப் பலியிட்டான். அவ்வாட்டுக் குட்டிகளே மறுபிறப்பில் அந்நாட்டு ராஜ குமாரனாகவும், மந்திரி குமாரனாகவும் பிறந்து அதே பூசாரியை பலியிட்டனர்.

விளக்கின் திரியை எலி தூண்ட அது மறுபிறப்பில் பலிச்சக்ரவர்த்தியாகவும், சிவலிங்கத்தின்மீது குரங்கானது அறியாமல் வில்வ இலையை போட்டதினால் மறுபிறப்பில் முசுக்குந்த சக்ரவர்த்தியாகவும் பிறந்ததும் அறிவோம்.

எனவேதான் மகான்கள் செயல்கள் எத்தன்மையதாய் இருந்தாலும் பிறவி வாய்க்கும் என்று உணர்ந்தே பிறப்பு வேண்டாம் என்றனர்.

'' பிறவாதிருக்க வரந்தரல் வேண்டும்''
—பட்டினத்தார்.

'' பிறவாமை வேண்டும்''
—காரைக்கால் அம்மையார்.

'' இனிப்பிறவாது நீயருள் புரிவாயே''
—அருணகிரிநாதர்.

'' பிறவாமை வேண்டும் பிறந்தால் உன்னை
மறவாமை வேண்டும்''
—ஔவைப் பிராட்டியார்.

இப்படி நம்முன்னோர்கள் பகன்றது கண்டு நாம் விழிப்படைவது தான் இப்புத்தாண்டில் நாம் காணும் பெருஞ்செல்வம் ஆகும். இதனைத் தான் திருவள்ளுவர் 'தோன்றின் புகழோடு தோன்றுக அஃதிலார் தோன்றலின் தோன்றாமை நன்று' என்று விளம்புகிறார். தோன்றும் போதே அதாவது பிறக்கும் போதே எப்படி புகழுடன் பிறப்பது? புகழ் என்பது வாழ்வில் தன் செயல்களால் விளைவது ஆகும். இப்படிப்பட்ட நீங்காப் புகழுக்கும் அவரே விடையும் கூறுகிறார்.

''வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்கு யாண்டும் இடும்பை இல'' என்று. எனவே இறைவன் அடிசேர முயலுதலே புகழும், சிறப்பும், சுகமும் ஆகும். 'இருவினை மும்மலமும் அற இறவியொடு பிறவியற ஏக போகமாய் நீயும் நானுமாய் இருகும் வகை பரம சுகம்' என்று விளக்கம் அளிக்கிறார் அருணகிரிப் பெருமான். பிறப்பால் அடைந்து விட்ட இப்பிறப்பில் நாம் இனிப் பிறக்காதிருக்கும் வண்ணம் அணை போட்டுக்கொள்ளுதலே இப்புத்தாண்டில் நாம் செய்யும் சிறப்பான செயல் ஆகும்.

'கூடும் அன்பினில் கும்பிடலன்றி வாடும் உயிர்க்கு வழியேது' என்னும் வாக்கிற்கொப்ப சிறப்பான அரிய பிறவியைப் பெற்றிட்ட நாம் இறைவனுடன் கலந்து இனிப்பிறக்காமல் இன்புறுதலே தனிச்சிறப்பு ஆகும். பிறந்துவிட்ட இப்புத்தாண்டில் நாம் நமது இஷ்ட தெய்வங்களை வணங்கி பயன் பெறுதலே சிறப்பு ஆகும். இச்சிறப்பினை உணர்த்துவது நமது இந்து மதம். இந்து தர்மத்தின் உயிரோட்டமே 'சாந்தி சாந்தி' என்பதாகும் இது பிற எம்மதமும் போதிக்காத பொலிவு ஆகும். இந்து மதத்தைச் சார்ந்த இந்துக்களாகிய நாம் ஒற்றுமையால் பலப்படுவதே எதிர்கால வாழ்வை சிறப்பிக்கச் செய்யும் வழிகாட்டியாகும்.

எனவே பிறந்த 1991ம் புத்தாண்டில் நாம் சிறப்பாய் செய்ய வேண்டியது நாம் நம் பிறப்பின் பயனறிந்து பிறப்பறுத்தல். அப்பிறப்பறுக்க நம் இஷ்ட தெய்வங்களை வந்தித்து வாழ்த்தி வணங்குதல். வணங்க வழிவகுத்த நம் மதத்தை போற்றுதல். போற்றுதலுடன் அதன் புகழ் பரப்ப ஒற்றுமைப்படுதல். ஒற்றுமையால் எதிர்காலத்தில் ஒரு புதிய சகாப்தத்தை உருவாக்கி நாட்டையும் வீட்டையும் வளமையாக்கும் பணியினைத் தொடருதல் ஒன்றே நம் பிறப்பால் நாமடையும் சிறப்பு என்று நம்புவோம், நலம்பெறுவோம். ஏனெனில் 'இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ' எனப்பகறுகிறார் வள்ளலார். அவர் வாக்கிற்கிணங்கவும் பிறப்பைச் சிறப்பாக்கிப் பெரும் பயனடைவோமாக. ★

# மதிப்புரை

*[1. விலக்ஷணானுபவம்; 2. திருவரங்கன் திருப்பதிகம்; ஆசிரியர் ஸ்ரீ விலக்ஷணானந்த பரமாத்ம சுவாமிகள் பிரதிகள் கிடைக்குமிடம்: ஸ்ரீ விலக்ஷணானந்த மையம் C/O. P. B. NO. 32, செங்கை 60300.]*

1. விலக்ஷணானுபவம் இந்நூல் ஸ்ரீ விலக்ஷணானந்தரின் திருவாக்காகும். இவர் பிறவியால் வைணவராயிருப்பினும் ஸ்ரீ இராமகிருஷ்ண பரமகிருஷ்ண பரமஹம்ஸரையும் வள்ளலாரையும் போல் சமரஸ சன்மார்க்கத்தை அனுபூதி வாயிலாகப் பட்டுணர்ந்தவராவார். பக்தி ஞான வைராக்கியங்களுக்கு உறைவிடமாக இவர் திகழ்ந்தார். இவருடைய வாக்குகள் யாவும் இவர் பட்டறிந்த உண்மைகளே யாகும்.

குருவருளே உய்வடைதற்கேற்ற உபாயமாகும் என்பதை "குருவருளால் குருபாதம் கொண்டடியேன் கூறுவனே" என்னும் அடியால் வலியுறுத்துகின்றார். யோகியர்க்குச் சோதி வடிவாக விநாயகர் காட்சியருளுவதை இவர் பட்டறிந்து கூறுகின்றார். இச்சோதியானது புறவிருளைப் போக்கும் முச்சுடர்களைப் போலல்லாமல் அவற்றால் போக்கவியலாத அகவிருளைப் போக்கும் ஆற்றல் படைத்ததாகும்.

"நன்றுடனே தீதுமிலா நாயகனிடம்" நோயினை நீக்கி நோயற்ற வாழ்வினை அருளுமாறு வேண்டுகின்றார். "என் மனைவி என் சுற்றம, என் வீடு, என் செல்வம் என் ஊரும் எந்நாளும் எல்லாமும் ஓங்கிடுக" எனறு மக்களுக்கு இம்மை இன்பங்களையும் அருளுமாறு இறைவனை வேண்டுகின்றார். "துவைத மறத்தோன்றியருளே செய்திடுவாய்" என்று துவைத்தை அகற்றுமாறு விநாயகரிடம் யான், எனது என் பவை அகன்றால் துவைதமும் அற்றுப் போகும். நாம் இறைவனுடன் இரண்டறக் கலந்து நிற்போம் என்னும் தத்துவமும் இங்கு அறிவுறுத்தப் பட்டுள்ளது.

. திருவரங்கப்பெருமான் திருப்பதிகம்: அருட் செல்வராகிய ஸ்ரீ விலக்ஷணானந்த பரமாத்மாவின் திருவாக்கை எம்மனோராய் எங்ஙனம் மதிப்பிட இயலும். இப்பெரியார் அகண்ட சச்சிதானந்த பரிபூரணராய் மன்னி நின்றார். இவர் வாக்கில் யான் சுவைத்த சுவையை ஒருவாறு அன்பர்களுடன் பகிர்ந்து கொள்ள முயல்கின்றேன்.

"திருவரங்கப் பெருமான் திருப்பதிகம்" பத்துச் செய்யுட்களைக் கொண்டுள்ளது.

உலக மக்களிடம் கொண்ட இரக்கத்தால் சுவாமிகள் அரங்கநாதரிடம் பலவாறு முறையிட்டு அவர்களைக் காக்க வேண்டுகின்றார்.

கருவிலுழன்று புவியில் பிறந்து கன்ம வசப்பட்டு அரங்கனை ஏத்தும் நினைவற்றிருக்கும் மாந்தர்க்குப் பிறவாப் பேற்றினைத் தந்து அவர்கள் தலையில் தன் திருவடிகளை வைத்துக் காத்தருளுமாறு அரங்கனை வேண்டுகின்றார்.

அருளறற நான்முகன் என் பிறவிக் கணக்கை எழுதமாட்டாமல் கை ஓய்ந்து போனான். எமனும் என்னை ஓயாமல் கொன்று இருகைகளும் ஓய்ந்து நின்றான். அவர்கள் பொருட்டேனும் என் பிறப்பு இறப்புகளை அகற்றி நின் திருவடிக்குத் தொண்டனாக நான் வாழுமாறு அருள்புரிவாயாக என்று வேண்டுகின்றார். "இவ்வுடலைத் தாங்கி யானடைந்த இடர்களுக்கோர் முடிவே இல்லை இனியும் இவ்வுடலை என்னால் தாங்க முடியாது. அழுக்காறு நிறைந்த நெஞ்சினனாய் அளவற்ற கொடுமைகளை இழைத்துவிட்டேன் ஆதலால் மாதர் மயலில் சிக்குண்டு மயங்கும் என்னை நின் திருவடியில் கூட்டுவித்துக் காத்தருளாவிடில் எனக்கு வேறு புகலில்லை" என்று அரங்கனிடம் உலக மக்களுக்காகச் சுவாமிகள் வேண்டுகின்றார்.

"உடலெடுத்த நாள் முதலாய் யான் ஒரு நல்வினையையேனும் செய்தறிய மாட்டேன். இப்பேர்ப்பட்ட யான் பிறவிப் பெருங்கடலை எங்ஙனம் கடக்க வல்லேன்" என்று மக்களுக்காகக் கழுவறககம [illegible]றார் சுவாமிகள். "பொருளைத் தேடி உழன்றதல்லால் நின் அருளை நாடி ஒரு நாளும் நின்றிலேன். தெருளாளர்க்கு அருளும் நீ மருளாளனான என்னையும் ஆட்கொள்ளாவிடில் எனக்குப் புகலேது" என்கின்றார்.

அரங்கனுடைய அழகில் எவ்வாறு ஈடுபட வேண்டுமென்பதை,

"பொன்னழகும் திருமேனி யழகும் நிலப்
புயலுருவத் தனியழகும் பொற்பு வாய்ந்த
முன்னழகும் பின்னழகும் முறையே நோக்கி
முடியாத முழு நலத்தின் முழ்கு வேனோ
தென்னழகு தருங்கொங்கைத் திருவார் வாழும்
திருவரங்கத் தாயிரவாய் சேடன் தன்மேல்
மின்னழகு தருமிடையார் இருவர் மேவ
விழிதுயிலும் பெருங்கருணை வெள்ளத் தரனே"

என்னும் செய்யுளின் மிக அழகாக எடுத்துக் காட்டுகின்றார்.

"பொன்னை வேட்டேனே ஒழிய அரங்கத்தம்மானே! நின்னை ஒரு நாளும் வேட்டறியேன். ஆதலால் மின்னலுக்கொப்பாய் அழிந்து படும் பிறவியை விலக்கும் வழியறியாது மயங்கி வாடுகின்றேன். இத்தகையேனுக்குப் புகல் நின்னருளையன்றி பிறிதொன்று உண்டோ" என்று அரங்கனிடம் மாந்தர்க்காகச் சுவாமிகள் வேண்டுகின்றார்.

இப்பாடல்கள் கல் நெஞ்சையும் கனியச் செய்யும் தெய்வத்தன்மை வாய்ந்தன வாகும்.

ஆர். கோபாலன்,
கங்கனபல்லி, சித்தூர்-4



# ஞான விகர்ணன்

புலவர். பெ. கிருஷ்ணராஜன், M.A.MEd.,
கருங்கல்பட்டி.

ஒரு வயல். நெற்பயிர்கள் அங்குச் செழித்து வளர்ந்திருக்கின்றன. பச்சைக் கம்பளம் விரித்ததுபோல அந்த வயல் பசுமையாகக் காட்சியளிக்கிறது. பயிர்களுக்கு நடுவே சில களைச் செடிகள் முளைத்திருக்கின்றன. அவை, பயிர்களுக்குப் போடப்படும் உரம், பாய்ச்சப்படும் நீர் ஆகியவற்றைத் தாம் எடுத்துக் கொண்டு கொழுத்து வளரத் தொடங்குகின்றன; அவை நெறபயிற்களின் வளர்ச்சியைத் தடுக்கின்றன. உழவன் அந்தக் களைச் செடிகளைப் பார்க்கின்றான்.வளரும்நெற்பயிர்கள் தளர்வது கண்டு வாட்டமடைகிறான். உடனே அந்தக் களைச் செடிகளைப் பறித்து எறிகின்றான். அதன் பிறகு நெற்பயிர்கள் முன்போலவே மீண்டும் செழித்து வளரத் தொடங்குகின்றன. நெல் வயலில் களைச் செடிகளைப் போல, நல்ல குடிமக்கள் வாழும் நாட்டில் கயவர்கள் சிலர் இருப்பது உண்டு. அக் கீழ்மக்கள் செய்யும் கெடுதல்களால் நல்லவர்கள் நலிவடைகிறார்கள். அப்போது நாடாளும் தலைவன் சட்டத்தின் துணைகொண்டு தீயவர்களை அழித்து நல்லவர்களைக் காக்கின்றான். இதனைத் தெய்வப் புலவர் திருவள்ளுவர்,

கொலையிற் கொடியாரை வேந்
தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்

என அழகாகக் கூறியுள்ளார்.

வேறொரு காட்சி. புதர் அடர்ந்த சிறிய காடு. எதற்கும் பயனபடாத செடி கொடிகள் அங்கு ஏராளமாக வளர்ந்திருக்கின்றன. புதராக மண்டிக் கிடக்கும் அந்தக் களைகளுக்கு நடுவே ஒரு துளசிச் செடி முளைத்திருக்கிறது. அந்தக் காட்டைச் செம்மைப்படுத்தி விளை நிலமாக்கச் சிலர் வருகிறார்கள். அங்கு வளர்ந்திருக்கும் செடி கொடிகளை யெல்லாம் வெட்டி எறிகிறார்கள். அப்படி அவைகளை அப்புறப்படுத்தும்போது துளசிச் செடியும் அழிக்கப்படுகிறது. துளசி நல்ல மருந்துச் செடிதான். ஆனால் களைகளோடு சேர்ந்து முளைத்ததால் அதுவும் வெட்டி எறியப்பட்டது. அதுபோல ஒருவன் நல்லவனாக இருந்தாலும், அவன் சேர்ந்துள்ள தீயோர் கூட்டம் அழிக்கப்படும்போது அவர்களோடு அவனும் தண்டிக்கப்படுகிறான். இதுதான் உலக இயல்பு. பாரதக் கதையில் வரும் விகர்ணன் என்பவனுடைய வரலாறு இதைத்தான் உணர்த்துகிறது.

திருதராட்டிரனுக்கு ஆண்மக்கள் நூறுபேர். அவர்களில் முதல் இருவர் துரியோதனனும் துச்சாதனனும் ஆவர். கடைசி மகன் விகர்ணன். துரியோதனனும் துச்சாதனனும் பஞ்சபாண்டவர்க்குச் செய்த கொடுமைகள் ஏராளம். அவ்விருவருடைய தம்பியரும் தமையனமார் வழி நின்று அக் கொடுமைகளை ஆதரித்தவர்களாவர். ஆனால கடைசித் தம்பியாகிய விகர்ணன் மட்டும் ஞானமும் அறமும் உடையவன். அதனால் அவன், துரியோதனனும் துச்சாதனனும் முறையல்லா நெறியில் செல்ல முற்பட்டபோதெல்லாம் நீதி கூறித் தடுக்க முயன்றான். ஆனால் அவனுடைய நல்லுரைகளெல்லாம் செவிடன் காதில் ஊதிய சங்கொலிபோல வீணாயின.

தருமன் துரியோதனனுடன் ஆடிய சூதாட்டத்தில் நாடு நகரம் செல்வம் ஆகியவற்றை இழந்ததோடு, தன்னையும் தம்பியரையும் தங்கள் மனைவியாகிய திரௌபதியையும் இழந்தான். அப்போது திரௌபதி துரியோதனன் தாயாகிய காந்தாரியின் வீட்டில் இருந்தாள். தோற்றப்பொருளைக் கைப்பற்றுதல் வென்றவர் இயல்பு. அதன்படி திரௌபதியைக் கொண்டுவருமாறு துரியோதனன் பிராதிகாமி என்னும் தேரோட்டியிடம் தெரிவிக்கின்றான். அரசர் பலர் இருக்கும் அவைக்குத் திரௌபதியை அடிமையாக அழைத்துவர அத்தேரோட்டிக்கு மனம் ஒப்பவில்லை. அதனால் அவன் அவளைக் கொண்டுவராமற்போகவே, துரியோதனன் கடுஞ்சினம் கொண்டான். துச்சாதனனைப் பார்த்து, “ஐவர்க்கு ஒருத்தியான அவளை அரசவைக்கு உடனே கொண்டு வருக” என்றான். அவ்வாறே துச்சாதனன் திரௌபதியின் கூந்தல் குலைய அவளை இழுத்து வந்து மன்னர் அவையில் நிறுத்தினான்.

உயர் ஆசனத்தில் திருதராட்டிரன் வீற்றிருநத அந்த அரசவையில் திரௌபதி விழிநீர் சொரிந்து அழுதாள். ‘உங்களுக்கெல்லாம் இதுதான் நீதியோ? கொடிய சூதாட்டத்தில்தருமன் முறைப்படி என்னைப் பந்தயம் வைத்துத் தோல்வி அடைந்திருந்தால் என்னை அடிமையாகக் கொள்வதில் நியாயம் இருக்கிறது என்று சொல்லலாம். சூதாட்டத்தில் தருமன் தன்னைத் தோறற பிறகு என்னைத் தோற்றானா? என்னைத் தோற்ற பிறகு தன்னைத் தோற்றானா?

## சந்தாதாரர்களுக்கு . . .

*31-3-91*—ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். புகார்களுக்கும்,விவரங்களுக்கும் 'ஆசிரியர்'ஸப்தகிரி,தி.தி.தே. திருப்பதி எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

4 93 95 174 187 293 296 298 376 385 390 501 1130
1148 1215 1296 1356 1381 1398 1404 1428 2662 2674
2677 2698 2699 2705 2721 2726 2727 2728 2737 2756
2760 2770 2781 2782 2789 2810 2831 2833 2836 2838
3926 3929 3935 3936 3948 3949 3950 3953 3954 3962
3968 3969 3982 3992 3993 4000 முதல் 4002 4007 4013
4016 4018 4033 4036 4043 4048 4058 4070 4071 4075
4083 4088 4091 4095 4652 4658 5360 5386 5389 5392
5394 5398 5400 5404 முதல் 5406 5410 5411 5416 5421
5425 5428 5429 5433 5438 5439 5442 5443 5448 5449
5451 5457 5461 முதல் 5464 5473 5484 5573 5576 5611
6790 6791 6835 6975 6976 6979 6982 முதல் 6999 7001
முதல் 7012 7013 முதல 7019 7021 7022 7024 7026 முதல்
7034 7036 முதல் 7040 7042 முதல் 7050 7052 முதல் 7058
7060 முதல் 7083 7085 7087 முதல் 7114 7116 முதல் 7119
7121 முதல் 7125 7127 முதல் 7144 7146 முதல் 7154 7156
முதல் 7159 7163 முதல் 7167 7169 முதல் 7176 7309 7310
8366.

இவற்றில் எது உண்மை என்பதை நீங்கள் கூற வேண்டும். தருமன் தன்னைத் தோற்பதற்கு முன்பே என்னைத் தோற்றிருந்தால் என்னை அடிமையாகக் கொள்வதில் எனக்கு மறுப்பில்லை. தருமன் தன்னைத் தோற்றப்பிறகு என்னைத் தோற்றிருந்தால், துரியோதனனுக்கு அடிமையாகிவிட்ட தருமனுககு என்னைப் பந்தயம் வைக்க உரிமையில்லை. அதனால் என்னை அடிமையாகக் கொள்ளத் துரியோதனனுக்கு நியாயமில்லை' என்று அவையோரைப் பார்த்துக் கூறினாள்.

துரியோதனன் கொடும்பாவியாதலால், அவையிலிருந்த அரசர்களெல்லாம் அவனுக்குப் பயந்து, உண்மையைக் கூறி நீதியை நிலைநாட்டத் துணிவு இல்லாமல் பேசாமடந்தைகளாய் இருந்தார்கள். அப்போது திரௌபதியின் வழக்கில் நியாயம் இருப்பதை உணர்ந்த விகர்ணன், துணிவுடன் எழுந்து நின்றான். அங்கிருந்த அரசர்களைப் பார்த்து, 'நீதி கூறாவிட்டால் நீஙகளெல்லாம் கொடிய நரகத்திற்குத்தான் போவீர்கள்.

தன்னையிவன் இழந்தடிமை
யான பின்னர்த்
தாரமேது ? வீடேது ?
தாத னான
பின்னையும் ஓர் உடைமை
உண்டோ ? என்று நம்மைப்
பெண்ணரசு கேட்கின்றார்.

(பாரதி)

நல்ல குலத்தில் பிறந்தவர்கள் தாங்கள் நேரில் கண்டதைச் சொல்லாமல் இருக்கமாட்டார்கள்" என்று கடிந்து பேசினான்.

விகர்ணன் கூறியதைக் கேட்டுத் துரியோதனனும் துச்சாதனனும் எதுவும் பேசவில்லை. ஆனால் கர்ணனுக்குக் கோபம் பொங்கி எழுந்தது. அவன் விகர்ணனை நோக்கி, "இந்த உலகத்தில் நீ ஒருவனதான் யோக்கியன். இங்கிருக்கும் அரசர்களிலெல்லாம் நீ ஒருவன்தான் அறிவாளி. நீதியை நிலைநாட்ட உன்னைவிட்டால் வேறு எவரும் இல்லை என்பது உன் நினைப்பு. எங்களுக்கெல்லாம் புத்திமதி சொல்லு என்று உன்னை யார் வந்துகேட்டார்கள்? ஒரு கருத்தைக் கூறுவதற்கு முன் பலருடன் ஆலோசிக்க வேண்டாமா?" என்று ஏளனம் செய்தான். விகர்ணன் சொன்னதைக் கேட்டு 'நீதி நிலைக்கும்' என்று நினைத்த அரசர்கள், கர்ணனது பேச்சால் மனம் தளர்ந்தார்கள். திரௌபதியின் மானத்தைக் காக்க விகர்ணன் எடுத்த முயற்சி, கர்ணனது எதிர்ப்பால் பகற்கனவாய்க் கலைந்தது.

பாண்டவர் ஐவரும் திரௌபதியும் பன்னிரண்டு ஆண்டுகள் காட்டிலும் ஓராண்டு நாடு ஒன்றில் மறைந்தும் வாழ்ந்த பிறகு வந்தால் அவர்கள் சூதாட்டத்தில் இழந்த செல்வமெல்லாம் திருப்பிக் கொடுக்கப்படும் எனத் திருதராட்டிரன் கூறினான். பாண்டவர்கள் அவ்வாறேபதின்மூன்று ஆண்டுகளைக் கழிததபின் கண்ணபிரானது ஆலோசனைப்படி உலூகன் என்னும அந்தணனைத் திருதராட்டிரனிடம் தூதாக அனுப்பினர் ஆனால் துரியோதனன் பாண்டவர்களுக்கு 'நாடு கொடேன்' என மறுத்துவிட்டான். அதனால் கண்ணபிரான் தாமே துரியோதனனிடம் தூது சென்றார். கண்ணபிரான் அரசவைக்கு வரும்போது அவரைக் கொல்ல வேண்டுமென்று திருதராட்டிரன் கூறினான். அது கேட்ட

"இவ்வுலகில் தூதரைக் கொன்றவர் எவருமில்லை. வயது முதிர்ந்தவர், இளம் வயதினர், வேதமுனிவர்கள், நோயால் வருந்துவோர், புகழ்ந்து பாடும் புலவர்கள், பெண்கள், தூதர்கள் என்னும் இவரைக் கொல்லுவது போன்ற பாவம் வேறு எதுவும் இல்லை. அவ்வாறு கொன்றவர்கள் நரகத்தைத்தான் அடைவார்கள்.

மூத்தவர் இளையோர் வேதமுனிவரர்
பிணியின் மிக்கோர்
தோத்திரம் மொழிவோர் மாதர்தூதர்
என்றிவரைக் கொல்லின்
பார்த்திவர் தமக்கு வேறுபாவம்
மற்றிதனின் இல்லை
பூத்தெரி தொடையாய் பின்னும்
நரகினும் புகுவர்.

மேலும், பழிக்கும் பகைவர்கள்கூடத் தனது இருப்பிடத்திற்கு வந்தால் அவர்களைக் கொல்லுவது பாவம் மட்டுமல்ல, வீரமும் ஆகாது. கடல் போன்ற சேனைகள் வந்து சூழ்ந்தாலும் கண்ணன் அகப்படமாட்டான். ஆகவே கண்ணனைக் கொல்லும் எண்ணத்தைக் கைவிடுங்கள்" என்று அறிவுரை கூறினான். கீழ்மக்கள் எப்போதும் நல்ல வழியை நாடியது இல்லை. அதனால் விகர்ணனது ஞானமொழிகள் சாக்கடையில் விழுந்த அமுதம்போல வீணாயின.

யார் தடுத்தும் பாரதப்போரை நிறுத்த முடியவில்லை. விகர்ணன் செஞ்சோற்றுக் கடன் கழிக்க முடிவு செய்தான். ஆறாம் நாள் போரில் விகர்ணன் அருச்சுனன் மகனாகிய அபிமன்யுவை எதிர்த்தான். அபிமன்யு அளவற்ற அம்புகளைச் செலுத்தி விகர்ணனின் தேரை அழித்துத் தேர்ப்பாகனையும் கொன்றான். விகர்ணன் தன் தம்பியாகிய சித்திரசேனனது தேரில் ஏறிப் போரைத் தொடர்ந்தான். அபிமன்யுவும் சலியாமல் போர் செய்து விகர்ணனது உடலிலிருந்து இரத்தம் பெருக அவனுடலைத் தன் அம்புகளால் துளைத்தான். சூரியன் மறைய அன்றையபோர் முடிவுற்றது. பதின்மூன்றாம் நாள் மீண்டும் விகர்ணன், துர்முகன் முதலான சகோதரர்களுடன் சேர்ந்து கொண்டு அபிமன்யுவை எதிர்க்கச் சென்றான். அபிமன்யு அவர்களை நோக்கி, "நீங்கள் எனக்குச் சமமானவர்கள் அல்ல. புறமுதுகிட்டு ஓடிப் பிழைத்துக்கொள்ளுங்கள்" என்று விரட்டி அனுப்பினான்.



சேஷ வாகனத்தில் ஸ்ரீ பத்மாவதி - ஸ்ரீநிவாசப்பெருமாள்
அனுப்பியவர்: என். எஸ். வி. ராகவன் - திருப்பதி.

பதினான்காம் நாள் போரில் விகர்ணன் வீமனோடு மோதச்சென்றான். தூரியோதனன் உள்ளிட்ட நூற்றுவரில் விகர்ணன் நல்ல உள்ளம் படைத்தவன் என்பதை வீமன் அறிந்திருந்தான். அதனால் அவன் விகர்ணனோடு போர் செய்ய விரும்பவில்லை. "நான் துரியோதனனையும் துச்சாதனனையும் போர்க்களத்தில கொல்வேன் என்றும், துச்சாதனனுடைய உடம்பிலிருந்து பெருகும் இரத்தத்தைக் குடிக்கும் வரை, கையால் நீரை எடுத்துக் குடிப்பதில்லை எனவும், தாகம் ஏற்படும்போது நீர் நிலையில் தண்டாயுதத்தால் அடித்துத் தெறிக்கும் நீரையே பருகுவேன் என்றும் முன்பு சபதங்கள் செய்திருக்கிறேன். அந்தச் சபதங்கள் தவறினாலும் உன்னைக் கொல்லமாட்டேன். துரியோதனனுடைய அரசவையில் நடுநிலையாகப் பேசியவன் நீ. நேர்மை தவறாத உன்னை எனது அம்புகள் கொல்லமாட்டா. பழிக்கு ஆளாகாத உன் நீதிநெறியை அறிந்திருக்கும் என் மனம் உன்னோடு போர் செய்யச் சம்மதிக்குமா ?

பார் அறிந்த பழிக்கு உட்படாத நின்
நேர் அறிந்தும் பொர நெஞ்சு
இயையுமோ ?
சீர் அறிந்தவர் செய்ந்நன்றி கொல்
வரோ?

உனது பெருமையை அறிந்த நான் நன்றி மறந்து உன்னைக் கொல்லுவேனோ ?" என்று கூறி விகர்ணனோடு போர் செய்ய வீமன் மறுத்து விட்டான்.

துரியோதனன் முதலிய தீயவர்களோடு பிறந்தும் பிறர்க்குத் தீங்கு நினையாத விகர்ணனாவது உயிர் பிழைக்கட்டும் என்று வீமன் நினைத்தான். ஆனால் விதி வேறுவிதமாக நினைத்துவிட்டது. விகர்ணன் வீமனுடைய பேச்சைக் கேட்காமல் நெருப்பை உமிழும் அம்புகளை வீமன் மேல் ஏவி, "என் அண்ணன்மார் பலர் உன்னுடன் போர் செய்து அழிய, நான் மட்டும் உயிர் பிழைப்பது நியாயம் அல்ல. அதனால் என்னை எதிர்த்துப் போருக்கு வருக" என்று அழைத்தான். திரிபுரம் எரித்த உருத்திரனைப்போல வீமன் சிரித்தும் வெறுத்தும் விகர்ணனோடு போரிட்டான். விகர்ணன் ஆவேசமாகப் போர் செய்து வீமனின் மார்புக் கவசம், தேர்க்கொடி ஆகியவற்றைப் பிளந்து வீழ்ந்திடச்செய்தான் இனியும் பொறுப்பது தகாது என நினைத்த வீமன் பிறைச்சந்திர அம்பினைச் செலுத்தி விகர்ணனின் தலையைத் துணித்து வீழ்த்தினான்.

விகர்ணன் நூலறிவு மிக்கவன்; நுட்பமான அறிவு உடையவன்; பொறுமை கொண்டவன்; யோக்கியன் என்னும் சிறப்புகளை உடையவன். இந்த ஒருவன்தான்

கலையுடையன் மதியுடையன்
பொறையுடையன் தக்கோன்

எனக் கர்ணன் விகர்ணனை ஏளனமாக ஏசியிருந்தாலும் உண்மையில் விகர்ணன் அந்தப் பெருமைகளுக்கெல்லாம் உரியவனே. சூதாட்டத்தில் தன்னை இழந்த பிறகு தருமன் திரௌபதியைப் பந்தயமாக வைப்பதில் நியாயமில்லை என்பதை எடுத்துக்கூறிய விகர்ணனை 'விகர்ணனாம் வாய்மைக் கடவுள்' என வில்லிபுத்தூராழ்வார் பாராட்டுகிறார். பாண்டவர்களுக்குச் செய்யும் தீங்குகள் நமக்கே தீங்காய் முடியும் எனக்கூறிய விகர்ணன் ஞான விகர்ணன் என்று குறிக்கப்படுகிறான்

இராவணனுடைய தம்பியருள் விபீஷணன்போல, துரியோதனனின் தம்பியருள் விகர்ணன் நீதிகளை நன்கு உணர்ந்து நடுவுநிலைமையோடு எடுத்துக் கூறியவன். தன்னிலும் மூத்த அண்ணன் துரியோதனன் எனினும், தன்னைப் பெற்ற தந்தை திருதராட்டிரன் எனினும் தீய வழியை ஆலோசித்தபோதெல்லாம் கடிந்து கூறி நல்வழிக்குச் செல்லுமாறு அவர்களைத் தூண்டியவன்.

தீவினையார் அஞ்சார் விழுமியார்
அஞ்சுவர்
தீவினை என்னும் செருக்கு

என்னும் குறள்மொழிக்கு ஏற்ப, அரக்கமனம் படைத்த துரியோதனன் முதலியோர் தீவினை செய்யத் துணிந்தபோது விகர்ணன் தீவினைக்கு அஞ்சி அவர்களைத் திருத்த முற்பட்டவன். அதனால்தான் விகர்ணன் இன்னும் நல்லோர் இதயங்களில் இடம் பிடித்திருக்கின்றான்.



(4-ம் பக்கத் தொடர்ச்சி)

தி.தி. தேவஸ்தானத்தாரின் 5 ஏக்கர் நிலத்தினை அரசு பெருந்து போக்குவரத்துறைக்கு 30 வருட காலத்திற்கு குத்தகைக்கு தர மேலாண்மை முடிவு செய்துள்ளது.

தமிழ்நாட்டில் காஞ்சிபுரத்தில் தி. தி. தேவஸ்தானத்தாரின் விருந்தினர் விடுதி மற்றும் தகவலறிவிப்பு நிலையம் ஒன்றினைக் கட்ட ரூ. 30 இலட்சம் வழங்குவதென்று குழு முடிவு செய்துள்ளது.

தற்போது திருச்சானூரில் கோயிலுககுப் பக்கத்திலுள்ள பெரிய நிலப்பரப்பில் அமைநதுள்ள பழைய திருமண மண்டபங்களை இடிதது விட்டு, அங்கு ரூ. 68 இலட்சம் செலவில் பெரிய திருமண மண்டபங்களைக் கட்டுவதென்று மேலாண்மை முடிவு செய்துள்ளது.

திருப்பதியிலுள்ள தி. தி தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ பாலாஜி உடல் ஊனமுற்றோர் நலவாழ்வு மருத்துவ மனைக்காக முதுகுத்தண்டு சம்பந்தமான புதிய கருவிகளை வாங்குதற்கு ரூ. 72,000 ஒதுக்கப்பட்டுளளது.

ஆந்திர மாநில முதல்வர் திரு. ஜனார்தன ரெட்டி அவர்கள் 22-1-91 அன்று திருமலைக்கு, முதல்வர் பதவி ஏற்ற பிறகு முதல் தடவையாக, வருகை புரிந்தார். முதலமைச்சர் அவர்களை திருமலையில், அரசு அற நிலையத்துறை அமைச்சர், திரு. பி. பத்மநாபம் மற்றும தி. தி. தே. உயர் அலுவலர்கள் வரவேற்றனர். அன்று மதியம் கோயில் மரியாதைகள் அளிக்கப்பட்டு, ரங்க மண்டபத்தில் அன்னார்க்கு தி. தி தே. சமய நூல்களும், ஒலிப்பேழைகளும் வழங்கப் பட்டன. அன்று மாலை திருமலையில் ரூ. 12 செலவில் கட்டப்பட விருக்கும் 'ஸ்ரீ வேங்கடேஸ்வரா அரும் பொருட்காட்சி அகத்திற்கான கட்டிடம் ஒன்றிற்கு அடிக்கல நாட்டினார்.

∴ ∴

**இரண்டாவது உலக மகா பூஜை :**

தமிழ்நாடு சம்புவராயர் மாவட்டத்தில் திருவண்ணாமலையில் அருள் மிகு அருணாசலேஸ்வரர் திருக் கோயிலில் 12-5-91 அன்று, ஒரே இரவில் நடைபெறும் வகையில், 'ஒரு கோடி சிவ பஞ்சாக்ஷர ஜபம்' ஒன்று நடைபெற உள்ளது. 2000/-க்கும் மேற்பட்ட சாதுக்கள் சந்நியாஸிகள், யோகிகள் மற்றும் சிவனடியார்கள் இப்பூஜையினை உலக அமைதிக்காக, பங்கேற்று நடத்துவார்கள்.

இப்பூஜையின்போது, சிவபெருமானாரின மஹாமந்திரம் ஒரு கோடி முறை உச்சரிக்கப்படும் என்பது குறிப்பிடத்தக்க தொன்றாகும்.

திருப்பதியில் ஸ்ரீ பத்மாவதி பெண்கள் உயர்நிலைப்பள்ளி வளாகத்தில் 30- -91 முதல மூன்று நாட்களுக்கு பள்ளி சுகாதார முகாம் மறறும் பொருட்காட்சி ஒனறு தி. தி. தேவஸ்தானத்தின் ஆதரவில் நடைபெற்றது.

தி. தி. தேவஸ்தான 'அன்னமாசார்யா இலக்கியத் திட்டம' எனும் குழுவிற்குச் சிறபபு அலுவலராக பணியாற்றிய அறிஞர் பெருமகனாரான திரு. கௌரிபெத்தி இராம சுப்ப சர்மா அவர்கள் தமது 70-வது வயதில் திருப்பதியில் 21-1-91 அன்று தன இல்லத்தில் காலமானார். செப்பேடுகளில் பொறிக்கப்பட்ட அன்னமாசார்யாவின் தெலுங்கு கீர்த்தனைகளை நூல் வடிவில் பல தொகுப்புகளில் வெளிவர பெரிதும் காரணமாக இருந்தார் ஸ்ரீ சர்மா அவர்கள்.

Edited and Published on behalf of the T. T. Devasthanams by K. Subba Rao, M.A. and Printed at T. T. D. Press by M. Vijayakumar Reddy Manager, T. T. D. Press, Tirupati-517501.

VISIT

# SRI VENKATESWARA MUSEUM ON TEMPLE ART

TIRUPATI

## Visiting Hours

8.00 A.M. TO
8.00 P.M.

## Admission Rates

ADULTS : Re. 1.00
CHILDREN : Re. 0.50

Here is a unique Museum on Temple Art, where one can find rare icons, wood carvings and sculptures. It also prominently Displays the Origin and development of Vaishnavism and its rituals. The architectonics section of the Museum vividly describes the layout and styles of temple architecture and the section on iconbetry deals with measurements of icons through charts and illustrations. The essence of Silpasastras is fully brought out in the section on iconography.

Situated at the Kacheri Nammalvar Temple, S.V. Museum on Temple Art unravels the pristing glory of our culture and its intense spirituality.



